# தமிழ் நாவல்கள்

## (அகர வரிசை)

டாக்டர் வே. சீதாலட்சுமி

யாதும் ஊரே யாவரும் கேளிர்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# தமிழ் நாவல்கள்
## (அகர வரிசை)

டாக்டர் வே. சீதாலட்சுமி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of
Tamil Studies
டி. டி. டி. ஐ. தரமணி, சென்னை – 600 113.

## BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title of the book | **TAMIL NAVALKAL (AKARA VARICAI)** |
| Compiler-Editor | **Dr. V. Seethalakshmi,** Research Assistant, International Institute of Tamil Studies. |
| Publisher & © | International Institute of Tamil Studies T. T. T. I., (post) Taramani, Madras - 113. |
| Language | Tamil |
| Edition | First |
| Publication Number | [redacted] 116 |
| Date of Publication | August 1985 |
| Paper used | White printing |
| Size of the book | 21 × 18 cms. |
| Printing types used | 10 point |
| Number of Copies | 1200 |
| Number of pages | 8+48+422 |
| Price | Rupees Forty only |
| Printers | Meeraa Press AE-103, Anna nagar, Madras-600 040. |
| Binding | Paper back |
| Artist | Amudhone |
| Subject | Bibliography of Tamil Novels |

டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113.

# முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தேவையான, மிகவும் பயன் தரத் தக்க நூல்களை மட்டுமே வெளியிட்டு வருகிறது. இந்நூல் கள் ஆய்விற்குப் பெரிதும் துணை நிற்கின்றன. இவற்றை அடிப் படை நூல்கள் (Source Books) என்று சொல்லலாம். தமிழில் அச்சுத் தோன்றியது முதல் இன்றுவரை வெளிவந்துள்ள நூல் கள் எத்தனை என்பதைத் தெளிவாக நம்மால் சொல்ல இயல வில்லை. அதற்குரிய முயற்சிகளும் நம்மிடம் இல்லை. தமிழின் வளர்ச்சி நிலையைப் பல கோணங்களில் காண்பதற்கும், இன் னும் அதன் வளர்ச்சிக்கு மேற்கொள்ள வேண்டியன யாவை என உணர்ந்து செயற்படற்கும் தெளிந்த வளமான ஆய்விற்கும் இது மிகமிக இன்றியமையாததாம். நிறுவனத்தின் பல்வேறு முயற்சி களுள் ஒன்றாக இதுவும் அமைகிறது.

இவ்வகையில் ஏற்கெனவே இரு நூல்களை நிறுவனம் வெளி யிட்டுள்ளது. தமிழிலிருந்து பிற மொழிகளுக்குச் சென்றுள்ள நூல்களையும், பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு மொழி பெயர்க் கப்பட்டுள்ள நூல்களையும் தொகுத்து 'BIBLIOGRAPHY ON TRANSLATIONS' எனும் நூல் தருகிறது. தமிழில் இதுவரை வெளிவந்துள்ள வாழ்க்கை வரலாறுகளைத் தொகுத்தும் 'தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம்' எனும் நூல் தந்துள்ளது. இப் போது தமிழ்ப் புதினங்களின் தொகுப்பாக இந்நூல் வெளி வரு கிறது.

தமிழில் வெளிவந்துள்ள புதினங்கள் எத்தனை என்பதனை தெளிவாக இந்நூல், அவை பற்றிய ஆய்வுடன் எடுத்துக் காட்டு கிறது. தமிழ்ப் புதின வரலாறு, வளர்ச்சி, மற்றும் அதன் பொருள் ஆசிரியர் போன்ற பல ஆய்வுகளுக்கு இந்நூல் உறுதுணையாக

அமையும். இதனைச் செம்மையாக அரிதின் முயன்று ஆக்கித் தந்துள்ள டாக்டர் வே. சீதாலட்சுமி அவர்களைப் பாராட்டி வாழ்த்துகின்றேன்.

இந்நிறுவனப் பணிகள் அனைத்திற்கும் ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கட்கு எங்கள் நன்றி என்றும் உரித்தாகுக.

நூலைச் சிறப்பாக அச்சிட்டுத் தந்துள்ள மீரா அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி.

அன்பன்
ச. வே. சுப்பிரமணியன்

# என்னுரை

புதினங்கள் புற்றீசல் போல் பெருகி வரும் இக்காலத்தில் அவற்றின் வரவுக்கு ஓர் கணக்கெடுப்பாக - முழுமையாக முடியா விட்டாலும் - தொகுக்க இயன்ற அளவு முயல வேண்டும் என்ற நோக்கத்துடன் எழுதப்பட்டது இந்நூல்.

தமிழ்ப் புதினங்கள் வெளியாகும் வேகத்தைக் காணும்போது இன்று வரை ஏறத்தாழ 10,000 புதினங்கள் வெளிவந்திருக்கும் என்று தோன்றுகிறது. இந்நூலில் 6298 புதினங்களின் பெயர் களும், விவரக் குறிப்புகளும் தரப்பட்டுள்ளன. இவை 1983ஆம் ஆண்டு வரை வெளிவந்துள்ள புதினங்களாகும். இவற்றைத் தவிர, இன்னும் ஏராளமான புதினங்களும் இருக்கக் கூடும். எனவே, இந்நூலைத் தமிழ்ப் புதினங்கள் தொகுப்பு நூல் வரிசை யில் முதலாவதாகக் கூறலாமேயன்றி, முழுமையானதாகக் கூற வியலாது.

இந்நூலில், புதினங்கள் பற்றிய குறிப்புகள் அவற்றின் பெயர் களின் அகரவரிசையில் அமைக்கப்பட்டுள்ளன. புதினங்களின் பெயர் - ஆசிரியர் பெயர் - பதிப்பு - ஆண்டு - பக்கம் - பதிப்பு இடம் - பதிப்பகம் - விலை என்ற முறைப்படி ஒவ்வொரு நாவ லுக்கும் தரப்பட்டுள்ளன. எல்லாப் புதினங்களுக்கும் அனைத்துக் குறிப்புகளும் பெற முடியவில்லை. எனவே, குறிப்புகள் விடப்பட் டுள்ள நிலையில் அவை கோடிட்டுக் குறிக்கப்பட்டுள்ளன. புதின ஆசிரியர்களின் பெயர்கள் இயற்பெயராயினும், புனை பெயராயி னும் புதினத்தில் குறிக்கப்பட்டுள்ளவாறே தரப்பட்டுள்ளன. பல பதிப்புகள் இருந்தால் ஒவ்வொரு பதிப்புக்கும் விவரக் குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. பதிப்பு எண்ணிக்கை, வெளி வந்த மாதங்கள் முதலியன, முறையே, மு.ப. (முதல் பதிப்பு); சன, பிப் போன்று சுருக்கக் குறியீடுகளால் தரப்பட்டுள்ளன. பதிப்பகங்களின் பெயர்களிலும் சில, மீண்டும், மீண்டும் குறிக்கப் படும் நிலையில் அவற்றிற்குச் சுருக்கக் குறியீடுகள் அமைக்கப் பட்டுள்ளன. மாதப் புதினங்களும் இத்தொகுப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்புப் புதினங்களாக இருந் தால் அப்புதினம் பற்றிய குறிப்பின் இறுதியில் மூல நூலும், அதன் ஆசிரியர் பெயரும் தரப்பட்டுள்ளன.

புதினத்தின் பொருள் அடிப்படையில் சமூகப் புதினங்கள் துப்பறியும் புதினங்கள், பொழுதுபோக்குப் புதினங்கள் வரலாற்றுப் புதினங்கள், அறிவியல் புதினங்கள், குழந்தைகளுக்கான புதினங்கள் என்று காணவும், ஆசிரியர் அடிப்படையிலும், வெளிவந்த கால அடிப்படையிலும் புதினங்களைத் தொகுத்துக் காணவும் இத்தொகுப்பு நூல் ஓர் உறுதுணையாக இருக்கும் என்று நம்புகிறேன்.

ஆராய்ச்சிப் படிப்புக்கு அனுமதி தந்து, டாக்டர் பட்டம் பெறுவதற்கு உதவி, வழிகாட்டியவர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர். ச. வே. சுப்பிரமணியன் அவர்கள். அதோடு, ஆய்வு மேற்கொண்ட நிலையிலேயே கட்டுரைகள் எழுதச் செய்து, அவற்றை வெளியிட்டு என்னை எழுத்துலகில் ஈடுபடத் தூண்டியவர். எல்லாவற்றிற்கும் மேலாக, இன்றைய எழுத்துலகுக்கு ஏற்ற தலைப்பைத் தந்து, இந்நூலை உருவாக்க ஊக்கம் கொடுத்த அவர்களுக்கு என்றென்றும் நன்றியுடையேன்.

இந்நூலை உருவாக்கத் துணைபுரிந்த இந்நிறுவனத்தின் பிற ஆராய்ச்சியாளர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் புதினங்கள் தொகுப்புக்கு உதவிய டாக்டர் இராம. குருநாதன் அவர்களுக்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், மறைமலை அடிகள் நூலகம், சென்னைப் பல்கலைக் கழக நூலகம், தலைமைச் செயலக நூலகம், உ. வே. சாமிநாதையர் நூலகம், கன்னிமாரா நூலகம், ஆவணக் காப்பக நூலகம், மற்றுமுள்ள நூலகங்களுக்கு என் நன்றி. இந்நூலை நல்ல முறையில் அச்சிட்டு, வெளியிடுவதற்கு உதவி புரிந்த மீரா அச்சகத்தார்க்கும் என் நன்றி. என் முதல் படைப்பாகிய இந்நூலில் பிழைகள் இருப்பின் பொறுத்துக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

வே. சீதாலட்சுமி

## பதிப்பகங்களின் சுருக்கக் குறியீட்டு விளக்கங்கள்

| | | |
|---|---|---|
| அ.சு.நி. | — | அறிவுச்சுடர் நிலையம் |
| அருணோ | — | அருணோதயம் |
| அறிவு | — | அறிவு நிலையம் |
| ஆ.நூ.க | — | ஆசிரியர் நூற் பதிப்புக் கழகம் |
| ஆ.போ | — | ஆனந்த போதினி |
| ஆ.வி | — | ஆனந்த விகடன் |
| இன்ப | — | இன்ப நிலையம் |
| எரி | — | எரிமலை பதிப்பகம் |
| என்.பி.டி. | — | நேஷனல் புக் டிரஸ்ட் |
| கி.லி.சொ | — | கிறிஸ்டியன் லிட்டரேசர் சொசைட்டி |
| குழந்தைகள் | — | குழந்தைகள் உலகம் |
| சாகித்திய | — | சாகித்திய அகாடமி |
| சி.நூ.க | — | சிறுவர் நூற்பதிப்புக் கழகம் |
| சு.ப. | — | சுமதி பதிப்பகம் |
| த.எ.கூ.ச | — | தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம் |
| த.சு.நி. | — | தமிழ்ச் சுடர் நிலையம் |
| த.செ.நி | — | தமிழ்ச்செல்வி நிலையம் |
| த.ப | — | தமிழ்ப் பண்ணை |
| த.பு | — | தமிழ்ப் புத்தகாலயம் |
| நாவல் | — | நாவலகம் |
| பப் | — | பப்ளிகேஷன்ஸ் |
| பா.பு.ப | — | பாரி புத்தகப் பண்ணை |
| புக்ஸ் | — | புக்ஸ் இந்தியா பிரைவேட் லிமிடெட் |
| பொ.அ. | — | பொதிகை அச்சகம் |
| ம.நூ | — | மங்கள நூலகம் |
| மு.பு.நி | — | முத்துக்குமரன் புத்தக நிலையம் |
| மு.ப | — | முன்னேற்றப் பதிப்பகம் |
| வ.ப | — | வள்ளுவர் பதிப்பகம் |
| வா.வ | — | வாசகர் வட்டம் |

# உள்ளுறை

# தமிழில் புதினங்கள்

அறிவியல் வளர்ச்சியின் காரணமாக உருவாக்கப் பெற்ற இலக்கிய வகைகளில் ஒன்று புதினம் புதினம். என்றால் என்ன என்பதைப் பற்றிய விளக்கத்தைப் புதினங்களின் தொடக்கக் காலத்திலிருந்தே பலர் பலவாறான கருத்துக்களைக் கூறி வருகின்றனர். இருப்பினும் புதினம் என்பதைப் பற்றிய ஒரு த ப் பட்ட இலக்கணம் முழுமையாக-யாவரும் ஏற்றுக் கொள்ளும்படி அமையவில்லை. பழைய செய்யுள் இலக்கிய வகைகளைப் போலன்றி, இலக்கணம் வரையறுக்க முடியாத கட்டுப்பாடற்ற வகையாக இலங்குகின்றது புதினம். மேனாட்டு எழுத்தாளர்களும், தமிழ் எழுத்தாளர்களும் புதினத்தின் இலக்கணத்தையும், நோக்கத்தையும், சிறுகதை, நாடகம் போன்றவற்றோடு ஒப்பீட்டு நிலையிலும் கூறியுள்ளனர்.

### புதினம்-விளக்கங்கள்

புதினங்கள் நமக்கு மதபோதனைகள் மூலம் கிடைப்பதைப் போன்ற முழுமையான அறவழிகளைக் கற்பிக்கின்றன. நல்ல நூல்கள் வழியாக எல்லாவற்றிலுமே நல்லவற்றையும் காணஇயலும் என்று ஜேம்ஸ் என்பவர் கூறுகின்றார்.[1]

ஹென்றி லூயிஸ் என்பார், 'புதினத்தின் முக்கிய நோக்கம் மனிதனின் தவறுகளையும், கொடுமைகளையும் விளக்குவதே. வேறெந்தக் கலையும் இந்த நோக்கத்திற்காக இந்த அளவு பயன்படவில்லை[2] என்று கூறுகின்றார்.

---

1. Novels may teach us as wholesome a moral as the pulpit. There are 'sermons in stones' in healthy books, and 'good in every thing'.

   John. P. Bradlay and others, The International Dictionary of thoughts, (chicago, 1964), pa. 520.

2. The primary aim of the novel... is the representation of human beings at their follies and villainies and no other art form clings to that aim so faithfully
   — pa. 520.

'ஒரு புதின ஆசிரியனின் வேலை பெரிய நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறுவதல்ல. ஆனால் சிறிய நிகழ்ச்சிகளையும் ஆர்வ மூட்டக் கூடியதாக அமைப்பதாகும்'[3] என்று ஆர்தர் லன்பார் மொழிவார்.

புதினங்களையும், நாடகங்களையும் எழுதுவதில் கடைப்பிடிக்க வேண்டிய முக்கிய நெறி, தனது கதை மாந்தர்களைச் சதுரங்க விளையாட்டில் உள்ளது போன்று அமைப்பதாகும். அல்லாமல் குதிரை வீரனைக் காலாள் போன்று நகர்த்தி, விதிகளை மாற்றி, வெற்றியடைவதற்காக முயற்சிப்பதைப் போன்றதல்ல'[4] என்று ஜி.சி. லிக்டென்பர்க் என்பார் கூறுகின்றார்.

வில்லியம் ஹேஸ்லிட் ''நமது வாழ்வின் பெரும்பகுதி, என்ன வரப்போகிறது என்பதை எண்ணிப் பார்ப்பதிலும், மற்றவர் களுக்கு உண்மை வாழ்க்கையில் அல்லது கற்பனைக் கதையில் என்ன நடந்திருக்கும் என்பதை எண்ணிப் பார்ப்பதிலுமேயே கழிந்து விடுகின்றது. தீரச் செயல்கள் நிறைந்த புதினங்களைப் படிப்பதிலேயே உண்மையில் எனக்கு வாழ்க்கையில் நிகழக்கூடிய தீரச்செயல்களை விட அதிக இன்பம் கிடைக்கின்றது;'[5] என்கின் றார்.

டால்ஸ்டாய், நாவல் எழுதுவதென்பது ஆசிரியர் தான் உரு வாக்கும் கதை மாந்தர்களுடன் சேர்ந்து வாழும் வாழ்க்கையே ஆகும் என்கின்றார். 'ஒரு நாவல் (ஒரு பெரிய படைப்பு) எழுது

---

3. The business of the novelist is not to relate great events, but to make small ones interesting — pa. 521

4. In writing novels and plays the cardinal rule is to treat one's characters as if they were chessmen, and not to try to win the game by altering the rules-for example, by moving the knight as if he were a pawn.

   Rudolf flesch (editor) The Book of Unusual Quotations, (London, 1959), pa. 194.

5. The best part of our lives we pass in counting on what is to come; or in fancying what may have happened in real or fictitious story to others. I have had more pleasure in reading the adventures of a novel than I ever had in my own. — pa. 194.

வதென்பது கதாபாத்திரங்களுடன் சேர்ந்து வாழ்வது என்ப தாகும். அந்தப் பாத்திரங்களை நீ தான் உன்னுள் கருக்கொள் கிறாய். ஆனால் அவை உயிர்பெற்று வாழ்வது அவசியம். அது போழ்து, பல சமயங்களில் நீ விருப்பி எதிர்பார்த்ததற்கு மாறாக, அவை வேறுபட்ட நிலையில் நடந்து கொள்ள விரும்பு கின்றன. அந்தப் பாத்திரங்களை, நீ நினைக்கிற முக்கியப் பாதையை நோக்கித் தள்ளியும், அவை துன்புறுகிற போது நீயும் அவற்றோடு சேர்ந்து துன்புற்றும், அவற்றோடு சேர்ந்து வளர்ச்சி பெற்றும், சில சமயங்களில் உனது படைப்பான இந்தக் கற்பனைப் பெருந்தோற்றங்களோடு சேர்ந்து பாழ்வெளியில்கூட விழுந்தும், நீ அந்தப் பாத்திரங்களின் நடத்தையைக் கவனிக்கத் தொடங்குகிறாய்... இத்தகைய நாவலே உயரிய அமைப்புடை யது; இதுவே கலையாகும். நீ முற்றிலும் உன்னையே சார்ந்திருக் கிறாய். நீ சாதாரணமானவனாக, சிறியவனாக இருந்தால், உன்னுடைய நாவலில் எல்லா கதாபாத்திரங்களும் சிறிய மனிதர்களாகவே இருப்பார்கள். கலை ஒரு கடினமான தொழிலா கும். நீ ஒரு நாவலை எழுதுகிறபோது மனித இனம் பற்றிய ஒரு தேர்வினை எழுதியவனாகிறாய்[6]. மனித வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டும் ஓர் இலக்கியமாகப் புதினத்தை இவர் கருது வதைக் காணலாம்.

தேவி சங்கர் அவஸ்தி என்பார் புதினம் மற்றக் கதைகளிலிருந்து வேறுபட்டுத் தனித்து நிற்குமாற்றை விளக்குகின்றார். "கதை என்பது பொழுதுபோக்காகப் படிப்பதற்கு மட்டுமே தோன்றிய தல்ல. முற்காலத்தில் நன்னெறிகளைப் புகட்டுவதற்குக் கதை யைப் பயன்படுத்தினர். ஆனால் தற்கால வாழ்க்கையின் வலிமை யை ஏற்றுக் கொண்டு, யதார்த்த நிலையைச் சித்திரிக்கும் அடிப் படையில் சமுதாயத்தின் பலவிதத் தொடர்புகளின் சூழலில் பிரச்னைகளை நன்கு உணரவும், அலசி ஆராயவும் 'நாவல்' வாயிலாகத்தான் முயற்சி செய்ய முடியும். நாவலைப் படிக்கும் போது சுவாரஸ்யமாகவும் இன்பகரமாகவும் இருக்கவே செய் கிறது. எப்போதோ முடிவு கட்டிய உபதேசக் கொள்கைகளை இன்றைய நாவல் வலியுறுத்துவதில்லை. மாறாக பிரச்னைகளை எழுப்பி ஆராயும் தன்மை காணப்படுகிறது. நாவலின் சக்தி

---

6. டாக்டர். டி.எஸ். நடராஜன் (மொழி பெயர்ப்பாசிரியர்), எழுதும் கலை, (சென்னை, 1978), பக் 25.

யினால் கதை ஆசிரியரின் விவேகம், விழிப்பு, நுண்ணிய ஆய்வுத் திறன் இவற்றை நாம் நன்கு காண முடிகிறது. உயிரோட்டமுள்ள பாத்திரப் படைப்பும், நம்பத்தக்க நிகழ்ச்சிக் கட்டமைப்பும், சூழ்நிலை விளக்கமும் இந்தப் புதிய கதை இலக்கியத்தில் இருக்கின்றன. இவற்றிற்கு மையமாக இருக்கின்ற 'கருப்பொருள்' நாவல்களை வெறும் கதை நூல்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றது. 'அப்புறம் என்ன நடந்தது' 'எப்படி நடக்கிறது' 'எப்படி நடக்கப் போகிறது' என்ற கேள்விகள் நாவல்களில் முக்கியத்துவம் பெற்றன'' என்று இவர் கூறுகின்றார்.[7] இதில் புதினத்தின் கதைக் கருவும், கதைப் போக்கும் உயிரோட்டமாக அமைவதையும், சமுதாயத்தின் பிரச்சினைகளை அலசி ஆராயும் வகையில் மக்களுக்கு இன்றியமையாத ஓர் இலக்கிய வகையாகப் புதினம் அமைவதையும் இவர் கருதுவதைக் காணலாம்.

பி.கெ. பாலகிருஷ்ணன், ''நாவலின் உருவம், உள்ளடக்கம் முதலிய ஒன்றிலுமே பொது அங்கீகாரமுள்ள சட்டங்கள் எதுவும் இல்லை. ஒவ்வொரு திறமைசாலியின் கையிலும் அது விருப்பம் போல் விதவிதமான உருவையும், பாவத்தையும் அடைகிறது என்று சொல்லலாம். கதை சொல்ல வேண்டும். நாவல் என்பது ஒரு அபிப்பிராயம். இந்தப் பிரிவைப் பற்றிச் சற்றுச் சிந்தித்தால் கதை மிக அவசியம்தான் என்று தோன்றவும் கூடும். ஆனால், நாவல் இலக்கியத்தின் தனித்தன்மை கொண்ட பற்பல நல்ல படைப்புகளும், கதையென்று நாம் வழக்கில் நினைத்துக் கொண்டிருக்கும் அந்த அம்சத்தைத் தவிர்த்திருப்பதாகவோ, தவிர்க்க முயற்சித்திருப்பதாகவோ காணலாம்... நடைமுறைச் சித்தாந்தப்படி கதாபாத்திரங்கள் தான் நாவலில் கொஞ்சம் கூடத் தவிர்க்க முடியாத அம்சம். ஆனால் அதையும் தவிர்க்கும் சோதனைகள் கூடத் தற்கால நாவலாசிரியர்களில் சிலர் செய்ய முயல்கிறார்கள் என்று தோன்றுகிறது. சுருக்கமாகச் சொல்வதாக இருந்தால், கட்டுப்பாடுகள் இல்லாத இலக்கிய உருவம் தான் நாவல்''[8] என்பார்.

---

7 தேவி சங்கர் அவஸ்தி, 'சிந்தனைக்கு', மறைந்த காட்சிகள்

8 நீல. பத்மநாபன் (மொழி பெயர்ப்பாசிரியர்), 'நல்ல நாவலும் மகத்தான நாவலும்', குருக்ஷேத்ரம், நகுலன் (தொகுப்பாசிரியர்), (சென்னை, 1968), பக். 46.

தமிழ் எழுத்தாளர்களும் புதினத்தைப் பற்றிப் பலவகையான கருத்துகளைக் கூறியுள்ளனர்.

எளிய நடை, உள்ளத்திலிருந்து வந்த சொற்கள், நவரஸ பாவனைகள், விரசமில்லாத காதல் ரஸம், கம்பீரமான வீரச் சுவை, உலகியல்பின் மேடு பள்ளங்களைச் சித்திரித்துக் காட்டும் அனுபவத் திறமை ஆகியவற்றைக் கதையிலக்கணங்களாகச் சுத்தானந்த பாரதி கூறுகிறார்.[9]

''இனிய இயல்பான நடையில் சாதாரணமாய் யாவரும் அறியும் வண்ணம் பிரகிருதியின் இயற்கைஅமைப்பையும் அழகையும், அற்புதங்களையும், ஜன ஸமூகங்களின் நடையுடை பாவனைகளையும், மனிதர்களின் மனோ பாவங்களையும், மனோ (Thoughts) வாக் (Words) காயம் (Deeds) என்னும் த்ரிகரணங்களிலும் மனிதர்களுக்கு ஏற்பட்டுள்ள எண்ணிறந்த வித்தியாஸங்களையும், பிரத்யக்ஷமாய் உள்ளபடி கண்ணாடி போலப் பிரதிபிம்பித்துக் காட்டுவதே 'நாவல்' எனப்படும்'' என்று ஆர்.எஸ். நாராயண ஸ்வாமி அய்யர் கூறுகின்றார்.[10].

இவர்கள் காலம் செய்யுள் நடையிலிருந்து உரைநடைக்கு இலக்கிய உலகில் மாற்றம்நிகழ்ந்தகாலம்.எனவே எழுத்தாளர்கள் ஏறத்தாழ செய்யுள் நடையைப்போன்றஎதுகை,மோனை, கடினமான சொற்கள் இவற்றைக் கலந்து உரைநடை அமைத்து வந்தனர். நாவல்களின் முக்கிய நோக்கம் புலமை மிக்கவர்க்கு மட்டுமன்றி எழுதப் படிக்கத் தெரிந்த அனைவருக்கும் புரியும்படி அமைய வேண்டும் என்பதாகும். எனவே புதினத்திற்கு இன்றியமையாத முதல் தேவையாக எளியநடையை இவர்கள் முதலாவதாக வலியுறுத்துகின்றனர்.

''சிறுகதை வாழ்க்கையின் சாளரம் என்றால், நாவல் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் நிலைக்கண்ணாடி. வாழ்க்கையின் சிக்கல்களை, அதன் உயர்வை, அதன் சிறுமைகளை உலாவும் பாத்திரங்களான மனிதக் கூட்டத்தின் சலனத்தில், அவற்றின் குண விஸ்தாரத்துடன் சிருஷ்டிப்பது தான் நாவல். நாவலுக்குக்

---

9. வை.மு ஸ்ரீ. உதய சூரியன், (சென்னை, 1910) முன்னுரை

10. ஆர்.எஸ்.நாராயணஸ்வாமி அய்யர், மாலினீ மாதவம். (சென்னை, 1914) முன்னுரை.

கால எல்லை கிடையாது. சென்ற காலம், நிகழ்காலம். வருங் காலம் இவற்றின் நிகழ்ச்சியை மனோதர்மத்தால் சிருஷ்டியின் மேதை குன்றாமல் கற்பனை செய்வது தான் நாவல். சிறுகதை வாழ்க்கையின் ஒரு பகுதியை மற்றவற்றின் கலப்பை மறந்து விட்டுக் கவனிக்கிறது. நாவல் வாழ்க்கையை அப்படியே முழுசாக சிருஷ்டிக்க முயல்கிறது. இவை தான் ஆசிரியர்களின் இலட்சியங் கள். ஒவ்வொருவருடைய மனோதர்மத்திற்கும், சிருஷ்டி சக்திக் கும் அநுபவத்திற்கும் தக்கவாறு நாவல்கள் பிறக்கின்றன.''[11] என்று கூறுகின்றார் புதுமைப்பித்தன்.

''ஒரு நாவலாசிரியன் முன்னோடிகளின் எழுத்தைப் படித்து நாவலெழுத முயற்சிப்பது வீண். அவன் பல துறைகளிலும் நுண்ணறிவு பெற முயல்வதே சிறந்த நாவலாசிரியனாக உருவா வதற்கு வழி''[12] என்கின்றார் சி. சு. செல்லப்பா.

''நாவலை அதற்கு முந்திய இலக்கிய வடிவங்களிலிருந்து வேறுபடுத்துவது அதற்குச் சிறப்பியல்பாய் அமைந்த யதார்த்தப் பண்பாகும். யதார்த்த மென்பது கண்முன் காண்பதை உள்ள வாறே விவரிப்பதன்று. காண்பவற்றை ஆராய்ந்து அவற்றை வரலாற்றடிப்படையிலும், எதிர்கால நோக்கிலும் விளங்கிக் கொண்டு காரண, காரியத் தொடர்பில் நேர்மை குன்றாது விவரிப்பதே யதார்த்த நெறியாகும். நவீன யுகத்தில் இதனைச் சாதனையிற் காட்டுவதற்கேற்ற சாதனம் நாவலாகும்''[13] என் பார் க.கைலாசபதி.

புதினத்தின் குறிப்பிடத் தக்க கூறாகக் காலத்தைக் கூறுவர் கு.அழகிரிசாமி. ''ஒரு நாவல் 1966இல் சென்னையில் நடப்ப தாக எழுதப் பட்டால் அது இந்தக் காலக் கட்டத்தில் சென்னையில் தான் நடக்க முடியும் என்று சொல்லத் தக்கவாறு இருக்க வேண்டும். அப்படி காலத்தின் தனித்தன்மைகளையும்,

---

11 புதுமைப்பித்தன், 'சிறுகதை', புதுமைப்பித்தன் கட்டுரை கள். (மதுரை. 1963), பக். 37.

12 சி சு. செல்லப்பா, 'முன்னுரை' ஜீவனாம்சம் (சென்னை, 1977).

13 கே.எஸ். ராமமூர்த்தி, தீபம். (நவம். சென்னை, 1975), பக். 25. (மேற்கோள்).

களத்தின் தனித்தன்மையும், அந்தக் காலத்தில் நடமாடும் பாத்திரங்களின் தனித்தன்மைகளையும் படம் பிடித்துக் காட்டுவது தான் இலக்கியத் தரம் உடைய அசல் நாவலாக இருக்க முடியும்'' [14] என்று இவர் கூறுகின்றார்.

காலத்தின் இன்றியமையாமை பற்றிய இவ்வரையறை பொது வாகப் புதினங்களுக்கு உரியதாகக் கொள்ளலாமெனினும் பெரும் பாலும் வரலாற்றுப் புதினங்களுக்கே ஏற்புடைத்தாகக் கூறலாம். வரலாற்றுப் புதினங்களில் அக்காலத்தின் நாட்டு நிலை, மக்கள் நடையுடை போக்கு இவற்றைக் கற்பனைக் கண் கொண்டு புனைந்து அந்தக் காலத்திற்கே படிப்பவர்களை இட்டுச் செல் லும் போக்கு மிக இன்றியமையாததாகும். இதைப் போன்றதே களத்தின் சூழ்நிலையும். ஒரு இடத்தைக் களமாகக் கொள்ளும் பொழுது, படிப்பவர்களை அந்த இடத்திற்கே அழைத்துச் சென்றுவிடக் கூடிய ஓர் இயல்பு புதினத்திற்கு மிகவும் தேவை யானதாகும்.

உறுப்பழகும், ஒருமை நயமும் பெற்றுப் பொலிவதால் புதினத் தைக் காப்பியத்துடன் ஒப்பிடுகின்றார் எஸ். ராமகிருஷ்ணன். ''ஒன்றோடொன்று உயிர்த் தொடர்பு கொண்டிராத பஞ்ச தந்திரக் கதைகள் முதலிய கதைக் கோவைகளைப் போல வல்லா மல், நாவல் உறுப்பழகும், ஒருமை நயமும் பெற்றுப் பொலியும் நெடுங்கதையாக உள்ளது. வாழ்வின் ஏதோ ஓர் அம்சத்தைத் தன் கற்பனை வளத்தால் புதிதாகச் செப்பம் செய்து தரும் சிறுகதை ஆசிரியனைப் போல அல்லாமல் அகலக் கால் விரித்து, வாழ்வின் பல்வகை அம்சங்களை வெவ்வேறு கோணங்களி லிருந்து மனோபாவனைச் சிறப்புடன் நோக்கும் உரிமை நாவலா சிரியனுக்கு உண்டு என்பது உண்மை. ஆனால் அவன் எத்துணை தான் சஞ்சாரம் செய்த போதிலும், நாவலின் கட்டுக்கோப்பு இருப்பது அவசியம்; நாவலின் கதை நிகழ்ச்சியில் ஒருமை நயம் மிளிர்வது இன்றியமையாதது. இந்த வகையில் நாவலைக் காப்பியத்துடன் ஒப்பிடலாம்';[15] என்கின்றார் இவர்.

---

14. கு. அழகிரிசாமி, தமிழ் நாவல்கள், (சென்னை, 1966), தலைமை உரை.

15. எஸ். ராமகிருஷ்ணன், (மொழி பெயர்ப்பாசிரியர்) முன்னுரை, சக்கரவர்த்தி பீட்டர் (சென்னை, 1958).

''நாவல் என்பது என்ன? இனங்காட்டுவது பெரும் பிரயாசை. ஆளுக்கு ஆள் அவரவர் பண்பாடு, இரசிக்கும் தன்மை, இலக்கிய உணர்வு, இலக்கிய அபிப்பிராயம், சமூக நோக்கு இவற்றுக்குத் தக்கவாறு இனங்காட்டலாம். அது ஆறு குருடர்கள் ஆனையைத் தடவிப் பார்க்கும் கதை. இப்படி ஒரு கதையைச் சொல்லி விட்டார்களே என்பதற்காக ஆனையைத் தடவிப் பார்க்கிற ஆவேசம் இன்னும் நிற்கவில்லை. ஆனைக்கால் மட்டும் வரைந்து இது ஆனை என்று புதிய ஓவியர் தலைப்பு எழுதினால் நாம் சிரிக்கக்கூடாது. சிரிப்பவர்கள் ஞானம் இல்லாதவர்கள் என்ற ரீதியில் அங்கதக் குத்து கிடைக்கும்''[16] என்பார் தி. ஜானகிராமன்.

எழில் முதல்வன் ''நாவல் அது எழுந்த காலத்து வாழ்க்கையைத் திட்ப நுட்பமாகச் சித்திரித்தல் வேண்டும். அக்காலத்தில் வாழ்ந்த மக்களிடம் முனைப்பாக மேலோங்கி நின்ற பேரார்வங்கள் எவையோ அவற்றைக் காட்டுதல் வேண்டும். அவற்றையும் ஒவ்வொன்றாக அல்ல-ஒவ்வொன்றையும் ஒவ்வொன்றோடு தொடர்புபடுத்தி, - வை இருப்பு நிலையில் எந்த விகிதாசாரத்தில் இருந்ததோ அதே நிலையில் காட்டவேண்டும். நாவல் கூறும் சிந்தனை முடிவுகள் எதுவேயாயினும், அவை காலத்தின் குரலாகவும், அந்தக் காலத்துக்கே உரிய போதிய வாத ஆதாரம் உடையதாகவும் (Valid) இருத்தல் வேண்டும். காலத்தின் சிந்தனை எழுச்சியை அதன் முழு வீரியத்தோடு வெளிப்படுத்த வேண்டும்''[17] என்பார்.

### புதினத்தின் தோற்றம்

தமிழில் பதினாறாம் நூற்றாண்டில் உரைநடை நூல் தோன்றிய போதிலும் பதினெட்டாம் நூற்றாண்டிற்குப் பிறகே அது சிறப்புற்று வளரத் தொடங்கியது. அதற்குக் காரணங்கூறு ஒவார் அந்த இரண்டு நூற்றாண்டுகளும் அரசியல் குழப்பம் மிகுந்த நூற்றாண்டுகள். ஆங்கிலேயர் ஆட்சி நிலையூன்றிய பிறகே தமிழ் உரைநடை நூல் வளரத் தொடங்கியது என்பர்.

---

16 தி. ஜானகிராமன் 'அறிமுகம்', தி, பாக்கியமுத்து (பதிப்பாசிரியர்) நூறாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி, சென்னை, 1979 பக். IV

17 எழில் முதல்வன், 'தேசிய உணர்வு.' — பக். 59.

உரைநடை முதலில் வந்தாலும் அச்சுப்பொறி தமிழகத்தில் நிறுவப்பட்டதே தமிழில் உரைநடை நூல் வளரக் காரணமாயிருந்தது எனலாம்.[18].

தமிழகம் வந்த ஐரோப்பியர் தங்கள் சமயம் பரப்ப உரைநடையை முதலாவதாக அமைத்துத் தந்தனர். கி.பி.1577-இல் எழுதப்பட்ட கிறித்துவ வேதோபதேசம் என்னும் நூல் முதல் தமிழ் உரைநடை நூலாகக் கருதப்படுகின்றது. அதையடுத்து தத்துவ போதக சுவாமி தமிழ் நூல்களை எழுதினார். இதைத் தொடர்ந்து வீரமாமுனிவரும் பல உரைநடை நூல்களை எழுதினார்.

இவ்வுரைநடை நூல்கள் கிறித்துவ சமயம் பரப்பும் கருத்து நூல்களாய் அமைகின்றன. ஆயின் கி.பி.1825 இல் தாண்டவராய முதலியார் பஞ்சதந்திரக் கதையை மகாராஷ்டிரத்திலிருந்து மொழிபெயர்த்துத் தந்தார். தமிழ்க் கதைகளைத் திரட்டிக் கதாமஞ்சரி என்னும் நூலை வெளியிட்டார். வீராசாமி செட்டியார் அடுத்து விநோதரச மஞ்சரி என்னும் நூலை எழுதினார். இவை கதைப் போக்கினைக் கொண்ட உரைநடை இலக்கிய வகைகளான புதினம், சிறுகதை ஆகிய இருவகைகளுக்கும் முன்னோடியாக அமைந்தன எனலாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் மக்கள் அரும்பத உரைகளைக் கொண்டு கடினமான தமிழ் நடையைக் கையாளத் தொடங்கினர். எனவே இந்நிலையை மாற்றி மக்களை எளிய நடையில் எழுதச் செய்ய மேற்கொண்ட முயற்சியே 'பிரதாப முதலியார் சரித்திரமாக' மலர்ந்தது என்பர் டி.கே.சி.

'தமிழில் எழுதுவதும், பேசுவதும் பிறருக்கு விஷயத்தை விளக்கம் செய்வதற்காகத்தான் என்ற நோக்கம் போய், தாங்கள் மனனம் பண்ணின அரும்பத அகராதியைப் புரட்டிப் புரட்டிக் காட்டுகிற பகட்டுத் தொழிலாக மாறிவிட்டது. கையையும், காலையும் முறித்துச் செய்யும் ஹடயோக சாதனந்தான் தமிழில் எழுதுவதும் பேசுவதும் என்று பலரும் அஞ்சி ஓடிப்போய் விடும்படி ஏற்பட்டுவிட்டது...

---

18. டாக்டர். நா.செயராமன், 'கவிதையும் உரைநடையும்' உலகத்தமிழ் (மதுரை. 1981) பக் 95.96.

டாகும் புதினத்துக்கு ஒரு பவுன் சன்மானம் அளிப்பதாகவும் அறிவித்தார்கள்.

கா.ஸ்ரீ.ஸ்ரீயின் 'காம பாணம்' ஆர்.வியின் 'நிராசை' புதுமைப் பித்தனின் 'சிற்றன்னை' பி.எஸ்.ராமையாவின் 'கானல் நீர்' முதலிய புதினங்கள் இதில் வெளியாயின. அலெக்ஸாண்டர் குப்ரினின் 'யாமா தி பிட்' புதினத்தின் ஒரு பகுதியைப் புதுமைப் பித்தன் 'படுகுழி' என்று தமிழாக்கியிருந்தார். அதுவும் இதில் தொடராக வெளிவந்தது.

சரஸ்வதி எனும் இதழ் தொடங்கப் பெற்ற காலத்தில் தகழி சிவசங்கர பிள்ளையின் 'தோட்டியின் மகன்' எனும் புதினத்தைச் சுந்தர ராமசாமி மொழிபெயர்த்துத் தொடர்கதையாக வெளி யிட்டார்.[21]

புதினங்கள்

தமிழில் புதினம் தோன்றிய காலமுதல் இன்று வரை எழுதப் பெற்றுள்ள புதினங்களில் கிடைத்துள்ள பெயர்களைக் கொண்டு கணக்கிடும் பொழுது ஏறத்தாழ 6000 புதினங்களைக் கூறலாம். இவற்றோடு மேலும் பல புதினங்கள் இருக்கவேண்டும். அவற்றின் பெயர்கள் கிடைத்தில.

ஆரம்ப காலத்தில் புதினங்கள் அறிவுரை கூறக் கூடியன வாகவே பெரிதும் அமைந்தன. புதினம் என்ற புது இலக்கிய உருவத்தை மட்டும் கொண்டு தொடக்க காலப் புதினங்கள் எழுதப்பட்டன.

''அக்கால எழுத்தாளர்கள் 'நாவல்' என்னும் புதிய இலக்கிய வடிவத்தை மோகித்து நின்றார்களேயன்றி, அதன் பேராற்றலைப் புரிந்து கொண்டார்களில்லை. வடிவ மோகத்தில் அதன் பயன் பாடுகளை மறந்து போவது இயல்பேயல்லவா? 'நவீனகம்' 'நூதனக் கதை' 'அபிநவக் கதை' 'நூதன சரித்திரம்' என்றெல் லாம் செல்லமாகப் பெயரிட்டுப் பெயரிட்டு அதன் நவீனத்து வத்தை அதிசயித்து நின்றார்கள் அவர்கள். அந்த ஆனந்தாதிச

21. வல்லிக்கண்ணன், சரஸ்வதிகாலம், (பாளையங்கோட்டை 1982,) பக். 39-70.

யத்தில் 'நாம் யாருடைய சார்புரிமைப் பேச்சாளனாக இருத்தல் வேண்டும்? என்று சிந்திக்க மறந்து விட்டார்கள்... புதுவடிவ மோகம் அவர்களைத் தடம் மாற்றி எங்கேயோ இழுத்துப் போய் விட்டது.''[22] என்று எழில் முதல்வன் கூறியிருப்பதும் இதனை உணர்த்தும்.

பல புராணக் கதைகளும், மாயமந்திரக் கதைகளும், புதினங்களாக வெளிவந்தன. பண்டைத் தமிழ் இலக்கியச் செய்திகளை எளிய நடையில் மக்களுக்கு உணர வைக்கும் கருவியாகவும் பயன் பட்டு வந்தன. எயினியும், நாகனும் அல்லது இளந்தமிழ்க் காதலர், மதுரை அழகிய அம்பலவாணனால் எழுதப்பட்டு, இவ்வகை நூல்களுக்கு ஒரு சான்றாக அமைகின்றது. புற நானூற்றில் வந்துள்ள ஒரு சில வரலாற்றுப் பகுதிகளின் விரிவாக இப் புதினம் காணப்படுகின்றது. இதன் முன்னுரையில், ''முதலிலேயே பெரிய நூல்களை வெளியிட்டுப் படிக்கும் வாசகர்களை மலைத்துப் போகும்படி செய்யாமல், தற்கால நாவல் அமைப்புப் போன்ற அருமையான அகப்பொருள், புறப்பொருள் கருத்துகளை எடுத்துக் கொண்டு, பழைய காலச் சரித்திரங்களோடு சேர்த்து அமைத்து, 'நாவல் நூல்கள் சில வெளியிடுவது இன்றியமையாதது என்று எங்களுக்குத் தோன்றியது''[23] என்று கூறியிருப்பது இதனைத் தெளிவுபடுத்துகின்றது.

நடைமுறை வாழ்வோடு தொடர்பு கொண்டிருந்த புதின இலக்கியம் வேறு திசையில் திரும்பியதன் விளைவால் ஆங்கிலப் புதினங்களின் மொழிபெயர்ப்புகளும், பல துப்பறியும் புதினங்களும் தோன்றின.

''இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், படித்த மக்களிடையே ஆங்கில மோகமும், ஆங்கிலக் கல்வியைப் புகுத்த வேண்டுமென்ற விருப்பமும் இருந்தன. ஓரளவு கல்வி கற்றவர்களின் கற்கும் ஆர்வத்தை நிறைவுபடுத்த எளிய பொழுது போக்கு இலக்கியம் தேவைப்பட்டது. இதற்கு முந்தியக் குடும்பக்

---

22. எழில் முதல்வன், 'தேசிய உணர்வு', நூறாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி, (சென்னை, 1979), பக். 65.
23. மதுரை அழகிய அம்பலவாணனார், 'முன்னுரை' எயினியும் நாகனும் அல்லது இளந்தமிழ்க் காதலர், (திருச்சி, 1938).

கதைகளிலும் மந்தப் போக்கே நிலவியது. மேலும் விறுவிறுப்பாகவும், சுவையாகவும், ஆர்வ நிலையோடும் கூடிய பொழுது போக்கிற்காகப் படைக்கும் நாவல்களைப் படிக்கும் வாசகர் பெருகிக் கொண்டே வந்தனர். சிந்தனைக்குச் சிறப்பிடம் கொடுக்காமல், எதைப் பற்றியும் கவலைப்படாமல் கற்பனையுலகில் வாழ விழைந்ததின் பயனே தமிழில் பொழுதுபோக்கு நாவல்கள் தோன்றி, வளர வாய்ப்பளித்தன.''[24] என்பர் ம.செ. இரபிசிங்.

''கொஞ்சம் வயதான பிறகு, புஸ்தகத்தைக் கடித்துச் சுவைப்பதற்குப் பதிலாக, படித்து ருசிப்பதற்கு ஆரம்பித்தேன். கதைப் புஸ்தகம் என்று எது கிடைத்தாலும் சரி, ஒரே மூச்சில் அதைப் படிக்காமல் விடுவதில்லை, விக்ரமாதித்தன் கதை முதல் கமலாம்பாள் சரித்திரம் வரையில் தமிழில் வெளியாகியிருந்த கதைப் புஸ்தகங்கள் பலவற்றை, பெரும்பாலும் இரவல் வாங்கியே படித்து விட்டேன். பண்டித நடேச சாஸ்திரிகளின் 'திக்கற்ற இரு குழந்தைகள்' என்னும் புஸ்தகத்தை ஒரு நாள் மத்தியானம் சாப்பிடாமல் படித்து முடித்தது எனக்கு ஞாபகமிருக்கிறது. ஸ்ரீரெங்கராஜுவின் 'இராஜாம்பாள்' என்னும் துப்பறியும் நாவலை, மண்ணெண்ணெய் விளக்கில் இராத்திரி ஒருமணி வரையில் படித்துக் கொண்டிருந்ததும் நினைவுக்கு வருகிறது. தமிழில் படிப்பதற்கு இன்னும் ஏராளமான கதைப் புஸ்தகங்கள் இல்லையே என்று நான் வருந்தியதும் உண்டு''[25]. என்பார் கல்கி. புதினம் என்னும் புத்திலக்கிய வகை எவ்வளவு பரபரப்புடன் மக்களால் படிக்கப்பட்டு வந்தது என்பதற்கு இது சான்றாகும். இதன் காரணமாக, புதினத்தை எப்படி எழுத வேண்டும் என்று எண்ணாமல் எப்படியாவது எழுத வேண்டும் என்ற விரைவுடன்கூடிய நோக்கம் எழுத்தாளர்களிடம் மிகுதிப்பட்டிருக்க வேண்டும். இது பலப்பல மொழி பெயர்ப்புகளும் துப்பறியும் புதினங்களும் மிகுதிப்படக் காரணமாயிருந்திருக்க வேண்டும்.

இவற்றிற்குப் பின்னர் தேசிய உணர்ச்சியை ஊட்டும் புதினங்கள் தோன்றின. கா.சி.வேங்கடரமணியின் 'தேசபக்தன் கந்தன்' என்னும் புதினம் இவ்வகையில் குறிப்பிடத் தக்கது.

---

24. ம.செ. இரபிசிங், 'பொழுதுபோக்கு நாவல்கள்', நூறாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி பக். 69.
25. கல்கி, 'முன்னுரை' வி. கிருஷ்ணசாமி, சுவாமியும் சிநேகிதர்களும், (சென்னை, 1939 பக்-106).

இதையடுத்த கால கட்டத்தில் சமுதாய, குடும்ப, அரசியல் சிக்கல்களையும் மற்றும் பல்வேறு வகையான செய்திகளை அடிப்படையாகக் கொண்டும் புதினங்கள் எழுந்தன. இவை புதினம் என்ற வடிவத்திற்கு மட்டுமன்றி, அதில் அமையவிருந்த கதைப் பொருளுக்கும் முக்கியத்துவம் அளித்தன. ''பழங்கால நாவல்களுக்கும், இக்கால நாவல்களுக்கும் புறநிலைக் கூறுகளில் எவ்வளவோ வேறுபாடு இருப்பதைக் காணலாம் 'கதை சொல்வது மட்டுமே பழைய நாவல்களின் பண்பாக இருந்தது. இக்கால நாவல்கள் வெறுமனே கதையை மட்டுமே சொல்லிச் சொல்வதை தம் நோக்கமாகக் கொண்டிருக்கவில்லை. அதற்கும் மேலாக வேறு எதை எதையோ சொல்ல நினைக்கின்றன''[26] என்ற கூற்றும் இதற்குச் சான்றாகும்.

இன்று புதினம் என்னும் வகைக்கும், அதில் கூறவரும் செய்திக்கும் கொடுக்கும் இடத்தைவிட அச்செய்திகளைக் கூறும் போக்கிற்கும் உத்திகளுக்கும் முக்கியத்துவம் அளிக்கப்படுவதைக் காணலாம். நாவலில் பயன்படுத்தும் சொற்களிலும், உரையாடல்களை அமைக்கும் முறையிலும், கதையைக் கொண்டு செல்லும் முறையிலும்புதிய உத்திகளை எழுத்தாளர்கள் கையாளுகின்றனர்.

இன்று வெளிவரும் புதினங்கள் முன்பு புதின எழுத்தாளர்கள் எழுதத் தயங்கிய செய்திகளையெல்லாம் கூறுவனவாகக் காணப்படுகின்றன. ஆண், பெண் உறவு தொடர்பான பல சிக்கல்களை இன்றுள்ள புதினங்கள் தங்கள் கதைப்பொருளாக அமைத்துச் செல்கின்றன. இவற்றோடு கொலை, கொள்ளை நிகழ்ச்சிகளைக் கொண்ட புதினங்களும் மிகுதியாகக் காணப்படுகின்றன. பல இளம் எழுத்தாளர்கள் புகழ்பெற்ற பிற எழுத்தாளர்களின் நடையைப் பின்பற்றிச் செல்வது இன்று புதின உலகில் மிகுதியாகக் காணப்படுகின்றது. ஆபாசமான நடையில், தேவையற்ற வருணனைகளை மிகுதியாக அமைத்துச் செல்வதை இன்றைய புதினங்களில் காணலாம் இவை விலக்கப்பட வேண்டியன.

**புதின எழுத்தாளர்கள்**

இன்று தமிழ்ப் புதின உலகில் ஏறத்தாழ 2500-க்கு மேற்பட்ட எழுத்தாளர்கள் காணப்படுகின்றனர். இதில் ஆண் எழுத்தாளர்கள் பெருமிடம் வகிக்கின்றனர்.

---

26. மா. இராமலிங்கம், புனைகதை வளம் (சென்னை, 1973), பக். 106.

தமிழ்ப்புதின வரலாற்றைத் தொடங்கி வைத்த முதல் புதின ஆசிரியராக மாயூரம் வேதநாயகம் பிள்ளை காணப்படுகின்றார்.

"வேதநாயகம் பிள்ளை தான் தமது பிரதாப முதலியார் சரித்திரத்தில் நாவல் என்ற மேல் நாட்டுச் சரக்கைத் தமிழருக்கு அறிமுகப்படுத்துகிறார். இவரைத் தமிழ் நாவலின் தந்தை என்றே கூறிவிடலாம் அது நாவலின் குறைகளை எல்லாம் தன்னுள் அடக்கியும், அவை குறையாமல் இருப்பது தான் அதன் அழகு. அது உண்மையில் நம் நாட்டில் வழங்கி வரும் மரியாதை ராமன், தெனாலி ராமன் கதைகளை ஒரே கதையில் திரட்டி வைக்கப் பட்டது தான்" [27] என்று புதுமைப் பித்தன் கூறுகின்றார்.

கதை மாந்தர்களின் உரையாடலைப் பயன்படுத்தி அவற்றின் இடையிடையே மக்களுக்கு அறிவுரை புகட்டும் பல பெரியோர் பற்றிய குட்டிக்கதைகளை அமைத்துச் செல்கின்றார் ஆசிரியர். இக்கதைகளில் தாம் அறிந்த பல நாட்டுச் செய்திகளையும், மற்றும் நகைச்சுவைக் கதைகளையும் தருகின்றார்.

"அறிவுறுத்தல், மகிழ்வூட்டல் என்னும் இரண்டு நோக்கங்களை முதன்மையாகக் கொண்டு அக்கால மக்களது வாழ்க்கை, கல்வி நிலை, மொழி நிலை, பழக்க வழக்கங்கள், சட்டம், ஒழுங்கு முதலிய பல்வேறு செய்திகளையும் இவர் கதையின் மூலம் வெளிப்படுத்தி உள்ளார். அதே நேரத்தில் இவைகளைப் பற்றிய தம்முடைய எண்ணங்களையும் வேதநாயகம் பிள்ளை வெளியிடத் தவறவில்லை. இந்த வகையில் இந்த நூலை ஒரு நாவல் என்பதைக் காட்டிலும் ஒரு சமூக வரலாறு என்று கூறுவதே பொருந்தும். இவையனைத்தையும் மீறிக் கதையில் ஈடுபடுமாறு சொல்லிச் செல்வது தான் வேதநாயகம் பிள்ளையிடத்தில் நாம்காணும் தனிச்சிறப்பெனலாம்" [28] என்பார் இரா. தண்டாயுதம்.

தமிழில் தாமே பல சொல்லாக்கம் செய்திருப்பதை இவர் புதினத்தில் காணலாம். தூதர்களின் பெண்பாலைத் தூதிகள் என்றும், ஏமாந்தேன் என்பதைச் ஏமாறினேன் என்றும், சுதந்தரமாய் இருக்கிறவன் என்பதைச் சுதந்திரிக்கிறவன் என்றும் பல சொற்கள் புதுமையானவாய் இதில் காணப்படுகின்றன.

27 புதுமைப்பித்தன், சிறுகதை-3, புதுமைப்பித்தன் கட்டுரைகள், பக். 42.

28. இரா. தண்டாயுதம், தற்காலத் தமிழிலக்கியம், பக். 33

தமிழ்ப்புதின வரலாற்றைத் தொடங்கி வைத்த முதல் புதின ஆசிரியராக மாயூரம் வேதநாயகம் பிள்ளை காணப்படுகின்றார்.

"வேத நாயகம் பிள்ளை தான் தமது பிரதாப முதலியார் சரித்திரத்தில் நாவல் என்ற மேல் நாட்டுச் சரக்கைத் தமிழருக்கு அறிமுகப்படுத்துகிறார். இவரைத் தமிழ் நாவலின் தந்தை என்றே கூறிவிடலாம் அது நாவலின் குறைகளை எல்லாம் தன்னுள் அடக்கியும், அவை குறையாமல் இருப்பது தான் அதன் அழகு. அது உண்மையில் நம் நாட்டில் வழங்கி வரும் மரியாதை ராமன், தெனாலி ராமன் கதைகளை ஒரே கதையில் திரட்டி வைக்கப் பட்டது தான்" [27] என்று புதுமைப் பித்தன் கூறுகின்றார்.

கதை மாந்தர்களின் உரையாடலைப் பயன்படுத்தி அவற்றின் இடையிடையே மக்களுக்கு அறிவுரை புகட்டும் பல பெரியோர் பற்றிய குட்டிக்கதைகளை அமைத்துச் செல்கின்றார் ஆசிரியர். இக்கதைகளில் தாம் அறிந்த பல நாட்டுச் செய்திகளையும், மற்றும் நகைச்சுவைக் கதைகளையும் தருகின்றார்.

"அறிவுறுத்தல், மகிழ்வூட்டல் என்னும் இரண்டு நோக்கங்களை முதன்மையாகக் கொண்டு அக்கால மக்களது வாழ்க்கை, கல்வி நிலை, மொழி நிலை, பழக்க வழக்கங்கள், சட்டம், ஒழுங்கு முதலிய பல்வேறு செய்திகளையும் இவர் கதையின் மூலம் வெளிப்படுத்தி உள்ளார். அதே நேரத்தில் இவைகளைப் பற்றிய தம்முடைய எண்ணங்களையும் வேதநாயகம் பிள்ளை வெளியிடத் தவறவில்லை. இந்த வகையில் இந்த நூலை ஒரு நாவல் என்பதைக் காட்டிலும் ஒரு சமூக வரலாறு என்று கூறுவதே பொருந்தும். இவையனைத்தையும் மீறிக் கதையில் ஈடுபடுமாறு சொல்லிச் செல்வது தான் வேதநாயகம் பிள்ளையிடத்தில் நாம்காணும் தனிச்சிறப்பெனலாம்" [28] என்பார் இரா. தண்டாயுதம்.

தமிழில் தாமே பல சொல்லாக்கச் செய்திருப்பதை இவர் புதினத்தில் காணலாம். தூதர்களின் பெண்பாலைத் தூதிகள் என்றும், ஏமாந்தேன் என்பதைச் ஏமாறினேன் என்றும், சுதந்தரமாய் இருக்கிறவன் என்பதைச் சுதந்திரிக்கிறவன் என்றும் பல சொற்கள் புதுமையானவாய் இதில் காணப்படுகின்றன.

---

27 புதுமைப்பித்தன், சிறுகதை-3, புதுமைப்பித்தன் கட்டுரைகள், பக். 42.

28. இரா. தண்டாயுதம், தற்காலத் தமிழிலக்கியம், பக். 33

இதற்கு அடுத்து ராஜமையர் தமிழ்ப் புதின வரலாற்றில் இடம் பெறுகின்றார். இவரெழுதிய கமலாம்பாள் சரித்திரம் இலக்கிய பூர்வமானது என்று போற்றப்படுகின்றது.

''ஆரம்ப கால நாவல்களில் பெரும்பாலானவையும் இந்த பயனைக் கருதியே எழுதப்பட்டன என்றும், கலையம்சம் குறை வென்றும் சிலர் கூறலாம். ஆனால் ராஜம் அய்யர் எழுதிய கமலாம்பாள், கலைக்குக் கலையும் பயனுக்குப் பயனுமாக இரண் டறக் கலந்த பூரண இலக்கியம் என்று சொல்ல வேண்டும். பத்தொன்பதாம் ஆண்டில் எழுதப்பட்ட தமிழ் நாவலானாலும் இன்றும் படித்து இன்றைய நிலைமை உணர்வு கொள்ள வைக் கும் வகையில் ராஜம் அய்யர் கதையின் கற்பனை நயத்துடன் கருத்தையும் தீற்றியிருக்கிறார். தமிழ் இலக்கியப் பண்பாட்டு டன் மேலை இலக்கிய நாவல் வகைக்கு இது ஓர் எடுத்துக் காட்டு'' [29] என்பர் எஸ். சிவபாத சுந்தரம்.

இவ்விரண்டு புதினங்களுடன் அ. மாதவையா எழுதிய பத்மாவதி சரித்திரம், எஸ். எம். நடேச சாஸ்திரி எழுதிய தீன தயாளு, தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை எழுதிய கமலாக்ஷி ஆகிய மூன்றும் தமிழின் முதல் ஐந்து புதினங்களாக வரலாற்றுச் சிறப்புடன் விளங்குகின்றன.

''நாவல் கலை தமிழருக்குப் புதிது. அதற்கு ஒரு மரபை ஏற் படுத்தித் தர முயன்றவர்கள் என்று இந்த ஐந்து ஆசிரியர்களை யும் தமிழர்கள் போற்ற வேண்டும். இலக்கியத்திலே எந்த முயற்சிக்குமே மரபு என்பதுதான் ஆணிவேர். மரபு என்று ஒன்று ஏற்படாத காலத்தில் எழுதுபவர்கள் பலவித கஷ்டங்களுக் குள்ளாகிறார்கள். அந்தக் கஷ்டங்களைச் சமாளிப்பதற்கு முன்னோடிகளுக்குச் சாமர்த்தியம் மிகவும் வேண்டும். இன்று தமிழ்க் கலையுலகில் நாவல் என்கிற விருக்ஷம் பரந்து விரிந்து ஓங்கி வளருகிறது என்றால் அதற்கு வழி செய்து தந்தவர்கள் வேதநாயகம் பிள்ளையும், ராஜமையரும், மாதவையாவும்,

---

29. எஸ். சிவபாத சுந்தரம், 'ஆரம்ப கால நாவல்களும் தற்கால நாவல்களும்', வளரும் தமிழ் இலக்கியம், பக். 11.

நடேச சாஸ்திரியும், பொன்னுசாமிப் பிள்ளையும்தான்''[30] என்று தமிழ்ப் புதின உலகின் வழிகாட்டிகளாக இந்த ஐந்து எழுத்தாளர்களையும் போற்றுகின்றார் க.நா. சுப்பிரமணியம்.

ஆங்கில மொழியிலுள்ள துப்பறியும் புதினங்களைத் தழுவி, புகழ் பெற்ற துப்பறியும் புதினங்களைப் படைத்தவர்கள் ஆரணி குப்புசாமி முதலியாரும், வடுவூர் துரைசாமி ஐயங்காரும். இவர்கள் தமிழ் நாட்டுப் பண்பாட்டுடன் கூடியதாகத் தங்கள் புதினங்களை அமைத்து மக்களைக் கவர்ந்தார்கள்.

இவர்களுக்குப் பின்னர்த் தோன்றிய எழுத்தாளர்களில் நாரண. துரைக்கண்ணன் கா.சி. வேங்கடரமணி வ.ரா. போன்றோர் சிறப்புடன் விளங்கினர். நாரண. துரைக்கண்ணனின் உயிரோவியம், கா.சி. வேங்கடரமணியின் முருகன் ஓர் உழவன், தேசபக்தன் கந்தன் ஆகியவையும் வ.ரா.வின் சுந்தரியும் குறிப்பிடத்தக்கவை.

வரலாற்றுப் புதினங்களுக்குத் தமிழ்ப் புதின உலகில் ஒரு நிலைத்த இடம் ஏற்படுத்திக் கொடுத்தவர் கல்கி. வரலாற்றுப் புதினங்களோடு அலையோசை, தியாகபூமி, போன்ற புகழ்மிக்க சமூகப் புதினங்களையும் இவர் தமிழ்ப் புதின உலகுக்கு அளித்தார்.

நடையாலும், சொற்களாலும், வருணனையாலும் நகைச்சுவை தோன்ற எழுதிப் புகழ்பெற்றவர் தேவன். இவரெழுதிய துப்பறியும் சாம்பு மிகவும் புகழ் பெற்றதாகும். சாம்பு, குருட்டாம் போக்கில் ஒன்று செய்யப் போக அது மற்றொன்றாகி விடுவதைப் போல், சாம்பு செய்யும் சாதாரணச் செயல்கள் அவனைத் துப்பறிபவனாக ஆக்கி விடுவதாக நகைச்சுவையுடன் இப்புதினத்தை அமைத்துள்ளார்.

வாழ்க்கையை உள்ளவாறே படம்பிடித்துக் காட்டுவதில் வல்லவர் கொத்தமங்கலம் சுப்பு. ராவ் பகதூர் சிங்காரம் என்னும் புதினத்தில் விவசாயிகள் வாழ்க்கையைக் காட்டி, அவர்களோடு நாமும் வாழ்வது போல் ஒன்றிவிடச் செய்கின்றார். இது

30. க.நா. சுப்பிரமணியம், 'முன்னுரை', முதல் ஐந்து தமிழ் நாவல்கள், (சென்னை 1957), பக் IV.

போன்றே தில்லானா மோகனாம்பாள், பந்த நல்லூர் பாமா ஆகிய புதினங்களில் கலைக் குடும்பத்தில் நாமும் வாழ்ந்து கொண்டிருப்பது போன்ற உணர்வை ஏற்படுத்துகின்றார்

வரலாற்றுப் புதினங்கள் எழுதிப் புகழ்பெற்ற சாண்டில்யன் , சமூகப் புதினங்களையும் எழுதியுள்ளார். இவர் எழுதிய கவர்ந்த கண்கள் என்னும் புதினம் சமயப் புதினமாகும். இதில் ராமாநுஜம் செய்த புரட்சிகள் சிலவற்றை, பல கிரந்தங்கள், உபநிடதங்கள் படித்து எழுதி, சிறப்பாக அமைத்துள்ளார். அவர் மிகவும் விரும்பி, சூட்சுமமும், கேலியும் கலந்து எழுதிய புதினம் நங்கூரம் ஆகும்.

''ரொம்பவும் இலக்கண சுத்தமான நடையின் விடைப்பை யும், செயற்கைத் தன்மையையும் குறைத்து, கொச்சையின் நெகிழ்ச்சியையும், ஒலிக்கோளாறையும் குறைத்து, கொச்சைக்கு மெருகு ஏற்றி பேச்சுப்போக்கான தோரணையில் அதன் ஏற்றம் இறக்கம் திருப்பம் தொனி அழுத்தம் இவைகளுடன் கூடிய ஒரு தமிழ் வசன நடைப்பாங்கையே நான் விரும்புகிறேன்''[31] என்று சி.சு. செல்லப்பா தான் விரும்பும் புதின நடையைப் பற்றிக் கூறு கின்றார். புதினத்தின் செயல் இயக்கத்தைக் கதைக்கேற்றபடி மெதுவாகவும், விரைவாகவும் நடத்திச் செல்லக் கூடியவர் இவர். ஜீவனாம்சத்தின் கதைப் போக்கை மிகவும் மெதுவாகச் செல்வது போல் அமைத்த இவர் வாடிவாசலில் மிகவும் வேகமாகச் செல் வது போல் காட்டியிருக்கின்றார். காளைக்கும், மனிதருக்கும் நிகழும் போட்டி பற்றி 'வாடிவாசல்' என்னும் புதினத்தின் மூலம் ஒரு புதிய உலகத்தையே அறிமுகப்படுத்துகின்றார் இவர்

தேசியம், சமுதாயம் போன்றவற்றை மையமாகக் கொண்டு புதினங்கள் எழுதி, புகழ் பெற்றவர் அகிலன். பெண், சிநேகிதி, சித்திரப்பாவை, பால்மரக்காட்டினிலே போன்ற பல புகழ் பெற்ற புதினங்களை எழுதிச் சிறப்புப் பெற்றவர் இவர்.

இலக்கியத் தமிழ் நடையில், அற நெறிகளைக் கூறும் முக மாகப் புதினங்களை அமைத்துச் செல்வார் மு. வரதராசனார்.

---

31. சி.சு. செல்லப்பா, குறித்த நேரத்தில், (சென்னை, 1977), பக் 5-14.

இவரது புதினத்தைக் 'கருத்துப் புதினம் என்ற வகையில் அடக்கு வர்.[32]

அமெரிக்கா செல்லாமலேயே வாஷிங்டனில் திருமணத்தைக் கற்பனைக் கண் கொண்டு சிறப்பாக எழுதி மிக்க புகழ் பெற்றவர் சாவி. இவரது 'தெப்போ 76' ஜப்பானில் நம் ஊர்த் தேர்த் திருவிழா நடத்திய கற்பனைக் காட்சியைக் காட்டுகின்றது. நகைச்சுவை மிகுந்த இவ் புதினங்களில், பல புதிய செய்திகளைப் படிப்போர்க்குத் தரக்கூடிய அறிவாற்றலும் இருக்கக் காணலாம்.

சமுதாயத்தின் பல்வேறு பிரச்னைகளை அலசுவதைத் தமில னின் புதினங்களில் காணலாம். இவரது 'வாழத் தெரிந்தவர்கள்' வேலையில்லாத் திண்டாட்டத்தையும், திருமணப் பிரச்னையை யும் அலசுகிறது. 'வசந்தி நீ வாழ்க' பெண்ணின் பெருமை யில், 'குதிரைகள் ஓடுகின்றன' குதிரைப் பந்தய வெறியில் சிக்கிய வர்கள் மீளமுடியாமல் தவிப்பதையும் கூறுகின்றது. ஆங்கிலத் தில காணப்படுவது போல் சிறுவர்க்கேற்ற துப்பறியும் புதினங் கள் மிகுதியாக வரவேண்டும் என்ற அவா உடையவர். அதன் காரணமாக எழுந்ததே இவரெழுதிய துப்பறியும் சந்நர் என்னும் புதினம்,

எழுத்தில் வேகம் அதிகமாகக் காணப்படுவதை இந்திரா பார்த்தசாரதியிடத்தில் காணலாம். மக்களின் வாழ்க்கையை, அவர்கள் இச்சமுதாய நாகரிகத்தில் மூழ்கி அலைவதையும், பொருளாதார ஏற்றத்தாழ்வும், அதற்காக அலைந்து போராடும் மக்களையும் இவர் எழுத்தில் காணலாம்.

இலக்கிய நடையுடன், இலக்கிய மேற்கோள்களை இடை யிடையே அமைத்துப் புதினங்கள் படைப்பவர் நா. பார்த்த சாரதி. இவரது 'குறிஞ்சி மலர்' இவரெழுதிய புதினங்களில் மிகவும் புகழ்பெற்றதாகும்.

---

32. Like the novels of Aldous Huxly, Dr. Mu. va's novel's can also be classified under novel of ideas' In a novel of ideas the author's ideas and thoughts predaminate more than the aspects of a story.

Dr. R. D handayudham. 'Dr. Mu. Va and his novels S. V. Subramanian, A. A. Ma navalan (Editor), Dr. Mu. va, (சென்னை 1975), pa. 50.

அறிவியல் துறையைப் புதின உலகுக்கு அறிமுகப்படுத்திய பெருமை சுஜாதாவுக்குரியது. இவர் எழுதிய 'சொர்க்கத் தீவு' இவ்வகையில் குறிப்பிடத்தக்கதாகும். மருந்துகளாலேயே கட்டுப்படுத்தப்பட்ட ஒரு சமுதாயத்தைப் பற்றி இவர் இப் புதினத்தில் கூறுகின்றார். புதிய நடையால், படிப்போரைக் கவரும் திறமை இவருடையது. நகைச்சுவையுடன், புதுப்புது உவமைகளைக் கலந்து இவர் தன் நடையைப் புதினங்களில் அமைத்துச் செல்கின்றார். அறிவியல் புதினங்களோடு, சமுதாய துப்பறியும் புதினங்களையும் மிகுதியாக எழுதியுள்ளார்.

பொதுவாக, ஏழைகள் கோழைகளாக இருக்கக்கூடாது என் பதைப் புதினங்களில் கூறிச் செல்வதை சு. சமுத்திரத்தின் எழுத் தில் காணலாம்.

இவர்களோடு தி. ஜானகிராமன், ஜெயகாந்தன், மகரிஷி, மற்றும் பல புதின எழுத்தாளர்கள் தங்கள் படைப்புகள் மூலம புதின உலகில் நிலைத்த இடம் பெற்றுத் திகழ்கின்றார்கள்.

இருநூற்றுக்கு மேற்பட்ட பெண் எழுத்தாளர்களும் இன்று புதின உலகில் காணப்படுகின்றனர்.

நூற்றுக்கு மேற்பட்ட புதினங்களை அக்காலத்திலேயே எழுதிச் சிறப்பிடம் பெற்ற பெண் புதின எழுத்தாளர் வை.மு. கோதைநாயகி. இவர் முதலில் எழுதியது இந்திர மோகனா என்ற நாடகம். என்றாலும் புதினத்துறையிலேயே இவர் புகழ் பெற்றார். பெண்களைப் பற்றியும், நாகரிக மோகத்தில் அலையும் பெண்களைத் திருத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு பல புதினங்கள் எழுதியுள்ளார். இவர் புதின எழுத்தாளராகச் சிறந்து விளங்கியமைக்கு மகாத்மா காந்தியால் போற்றப் பட்டுள்ளார்.

பண்டிதை விசாலாக்ஷியம்மாள், கிருபை சத்திய நாதன் அம்மாள் மற்றும் பலர் இவரைத் தொடர்ந்து புதின உலகுக்கு அறிமுகமாயினர்.

இன்று லக்ஷ்மி, அநுத்தமா, கோமகள், சூடாமணி, சிவ சங்கரி, இந்துமதி, வாசந்தி, அனுராதா ரமணன் போன்ற பல பெண் புதின எழுத்தாளர்கள் புதின உலகில் சிறப்புற்று விளங்கு கின்றனர்.

லக்ஷ்மி, அநுத்தமா, கோமகள், ராஜம் கிருஷ்ணன், போன்ற பெண் எழுத்தாளர்கள் பலரும் குடும்பப் புதினங்களைத் திறம்பட எழுதி வருகின்றனர். குடும்பத்தில் நிகழும் சிக்கல்களைத் தன் தனித்த எழுத்தாற்றலின் மூலம் கூறிச் செல்வதை லட்சுமியின் புதினங்களில் காணலாம். இராஜம் கிருஷ்ணன் பல் வேறிடங்களுக்குச் சென்று அங்குள்ள மக்களைப் பற்றிய கதைகளும், மலைவாழ் மக்களையும், தொழிலாளர் பற்றியும் புதினங்களில் கூறிச்செல்கின்றார்.

சிவசங்கரியின் எதற்காக என்னும் புதினம் பெண்களை மிகவும் கவர்ந்தது.

அண்மையில் வெளிவந்த 'ஒரு மனிதனின் கதை' குடிப் பழக்கத்துக்கு ஆளான ஒருவனைப் பற்றியது. "த்யாகுவின் வாழ்க்கை ஒரு குடிகாரனின் மனதைத் தொட்டுச் சிந்திக்க வைத்தால் கூடப்போதும். என் எழுத்துக்கு வெற்றி கிடைத்து விட்டது, என்று நினைத்திருந்ததால் 'நான் த்யாகுவாக இருந்தேன் இன்று மாறிவிட்டேன்'' 'என் கணவர் த்யாகுவைப் போல வாழ்ந்தார். இன்று திருந்தி விட்டார்', 'கங்காவிடமிருந்து நான் ஒரு பாடம் கற்றேன், -கற்றேன்' என்று பல கடிதங்கள் வந்த போது நான் நெகிழ்ந்துதான் போனேன்''[33] என்று இவர் கூறியிருப்பது இவர் எழுத்தின் ஆற்றலைக் காட்டுகின்றது. இவரும், இவரைப் போன்ற பிற எழுத்தாளர்களும் இத்தகைய ஆற்றலைப் பயன்படுத்தி சிறந்த புதினங்களைத் தமிழுலகுக்குத் தருவதை இவர்கள் இலட்சியமாகக் கொள்ள வேண்டும்.

## மொழிபெயர்ப்புப் புதினங்கள்

ஆங்கில மொழியிலிருந்து பெயர்த்து எழுதப்பட்ட தமிழ்ப் புதினங்கள் அக்காலத்தில் ஏராளமாய் இருக்கக் காணலாம். தாங்கள் ஆங்கிலத்தில் படித்ததை, ஆங்கிலம் அறியாதாரும் படித்தின்புற வேண்டும் என்பதையும் இம்மொழிபெயர்ப்புப் புதினங்களின் நோக்கமாகக் கூறலாம்.

வெண்டாமரையாள் அல்லது போர்வீரன் மனைவி என்ற தழுவல் புதினத்தின் ஆசிரியர் பு.வே. கனகசபாபதி முதலியார்

---

33 சிவசங்கரி. 'என்னுரை' ஒரு மனிதனின் கதை, (சென்னை-1981).

அந்நூலின் முகவுரையில் இதன் முதனூலை ஆங்கில பாஷையில் வாசித்த காலத்தில் அதிற்கண்ட விஷயங்களாலடைந்த வியப்பே முன்னின்று இதனைத் தமிழில் கேட்டு ஆனந்தமுற்ற இதனை யச்சிலிட்டு வெளிப்படுத்தியவருமாகிய வைகுண்ட நாடாரும், ஏனையோரும் வெளிப்படுத்த விரும்பியமையாலும் அங்ஙனம் செய்தேன்''[34] என்று கூறியிருக்கிறார்.

ஆங்கில மொழிபெயர்ப்புகளில் மற்றொரு அடிப்படை நோக்கமும் இருந்திருக்க வேண்டும். அது நாட்டை ஆண்டு வந்த ஆங்கிலேயரிடம் நன்மதிப்பைப் பெறும் நோக்கத்துடன் அவர்களைப் பற்றிய நல்லவைகளை மக்களிடையே எடுத்துக் கூறுவதாகும்.

''சாதாரண கதைப்புத்தகங்கள் வேடிக்கைக் கதைகளைச் சொல்லிப் படிப்போருக்கப்போது இன்பங் கொடுத்துப் புருஷார்த் தங்களைப் புகட்டாது போவதாலும் அப்படியுள்ள கதைகளும், மிகச் சொற்பமாகவே இருப்பதாலும், தற்காலம் நம்மையாண்டு வரும் ஆங்கிலேய உத்தம ஸ்ரீகளின் லக்ஷணங்களைத் தமிழ் நாட்டிற்கேற்றபடி திரித்துக் காட்டி அவர்களின் நன்னடக்கை களை அநுஷ்டிப்பிக்க வேண்டுமென்பதாலும், உலகத்தில் முன் னமே விவகாரங்களிலிருப்போருக்கும் இனி வருவோருக்கும் உப யோகப்படும்படி வெளிப்படுத்தினோதலாலும்'அவர்கள் இதனை யன்போடேற்று வாசித்து மகிழ்ந்து இவ்வகைய நூல் அநேகம் வரும்படி உதவி புரிவீர்களாக''[35] என்று மேற்கூறிய ஆசிரியரே கூறுவது இதனை உணர்த்தும்.

மொழிபெயர்ப்புகள் தமிழ் எழுத்தாளர்களுக்கு இலக்கியக் களத்தை விளங்கிக் கொள்வதற்கு உதவியுள்ளன. ''நாவல் உலகப் பொதுவான இலக்கிய வடிவம். எனவே நாவலாசிரியர்கள் அதன் உலகப் பொதுவான வளர்ச்சியை அறிந்து கொள்வது ஒவ் வொரு எழுததாளருக்குமுள்ள பொறுப்பாகும். நாவல் மொழி பெயர்ப்புகள் தமிழ் நாவலாசிரியர்களுக்குப் பெரிதும் உதவியுள் ளன. ஆங்கில மொழிபெயர்ப்புகளிலும் பார்க்க மலையாளம், கன்னடம் போன்ற அயல்மொழி நாவல்களின் மொழிபெயர்ப்புக்

---

34. பு.வே. சபாபதி முதலியார், வெண்டாமரையாள் அல்லது போர் வீரன் மனைவி, (சென்னை, 1901), முகவுரை.
35. முகவுரை.

கள் தமிழ் நாவல் ஆசிரியர்கள் தமது இலக்கியக் களத்தை நன்கு விளங்கிக் கொள்ள உதவியுள்ளனவெனலாம்''[36] என்பார் கா. சிவத்தம்பி.

பிறமொழிப் புதினங்கள் மொழிபெயர்ப்பதில் பல எழுத்தாளர் ஈடுபட்டு வந்தனர். இவர்களில் சிலர் தாங்கள் எழுதி வரும் புதினங்கள் மொழி பெயர்க்கப்பட்டவை என்பதை நூலிலேயே வெளிப்படையாகத் தெரிவித்து விடுவர். ஆனால் வேறு பலர் தாங்களே எழுதியது போன்று காட்டிக் கொள்வர். இவர்கள் இவ்வாறு செய்வது பிற மொழிகளில் மட்டுமன்றி தமிழில் உள்ள பிறரெழுதிய புதினங்களையும் தாங்கள் எழுதிய புதினங்கள் போல் காட்டிக் கொள்ளத் தொடங்கும் நிலைமைக்கு இழுத்து விட்டது.

பத்திரிகைகளில் தங்கள் பெயர் வரவேண்டும் என்று ஆசை பற்றியும், நாமும் எழுத வேண்டும் எனும் துடிப்போடும் எழுதக் கிளம்புகிறவர்கள் ஆங்கிலத்தில் உள்ள கதைகளைத் திருடுவதோடு நிற்பதில்லை; தமிழில் வந்த கதைகளையே திருடித் தங்கள் சொந்தச் சரக்கு போல் தள்ளி விடுவார்கள். இது இப்பொழுதும் வெற்றிகரமாக நடைபெற்று வரத்தான் செய்கிறது. அந்நாட்களில் இந்தக் களவாணித் தனத்தை அம்பலப்படுத்த வேண்டியது அவசியம் என்று தோன்றவும் நான் "மாரீச இலக்கியம்" என்ற கட்டுரையை எழுதினேன்''[37] என்று கூறுகிறார் வல்லிக்கண்ணன்.

ஆனால் ஆரணி குப்புசாமி முதலியோர், வடுவூர் துரைசாமி ஐயங்கார் போன்றோர் ஆங்கிலப் புதினங்களை மொழிபெயர்ப்பதில் செல்வாக்குப் பெற்று விளங்கினர். இவர்கள் பெரும்பாலும் துப்பறியும் புதினங்களையே மொழிபெயர்த்தும், தழுவியும் எழுதி வந்தனர்.

பின்னர் வி.எஸ். வெங்கடேசன்' அ.கி.ஜெயராமன் போன்றோர் சரத்சந்திரர், பங்கிம் சந்திர சட்டர்ஜி போன்ற வங்க மொழிப் புதின எழுத்தாளர்களின் புதினங்கள் பலவற்றை

---

36. கா. சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும், (சென்னை, 1968), பக். 63.

37. வல்லிக்கண்ணன், சரஸ்வதி காலம், ப-ள் 19-20.

மொழிபெயர்ப்பதில் சிறப்பிடம் பெற்று விளங்கினர். கா.ஸ்ரீ.ஸ்ரீ. மராத்தி எழுத்தாளரான வி.ஸ. காண்டேகரின் புதினங்கள் பல வற்றை மொழி பெயர்த்துள்ளார். இவர்கள் அம்மொழியின் சமூகப் புதினங்களைத் தமிழ் மொழியிலுள்ள புதினங்கள் போன்றே தோன்றும்படி உருவாக்கித் தந்து, சிறப்புப்பெற்றனர். ருசிய புதினங்கள் பலவற்றை பூ. சோமசுந்தரம் தமிழில் மொழி பெர்த்து அளித்தார்.

ஆனால் அந்நாளில் பல மொழி பெயர்ப்பாளர்கள் ஒரே ஆங்கிலப் புதினத்தை மீண்டும் மீண்டும் மொழிபெயர்த்திருப் பதைக் காணலாம். இவர்கள் இவ்வாறு செய்வதற்கு, பிற மொழிப் புதினங்களைப் பெயர்த்தெழுதி, மக்களுக்கு அறிவு புகட்ட வேண்டும் என்பதை நோக்கமாகக் கூறுவதை விட, இவர் களின் பிறமொழி யறிவைப் புலப் படுத்துவதும் மொழி பெயர்க்கும் திறனை வெளிப்படுத்துவதும் நோக்கங்களாகக் கூறலாம். சான்றாக லே மிஸரபிள், டான் குவிக்சோட் போன்ற புதினங்களைப் பல எழுத்தாளர்கள் மொழிபெயர்த்திருப்பதைக் காணலாம்.

இக்காலத்தில் மொழி பெயர்ப்புப் புதினங்கள் மிகவும் குறைந்து விட்டன. மக்களது ரசனைக்கேற்றபடி தமிழ் எழுத் தாளர்கள் தாங்களே புதினங்கள் எழுதி வருகின்றனர்.

இன்று மொழிபெயர்ப்புப் புதினங்களை வெளியிடுவதில் ஆர்வங் காட்டி வரும் குறிப்பிடத் தக்க நிறுவனங்களாக நேஷனல் புக் டிரஸ்ட், என்.சி.பி.எச் ஆகியவற்றைக் கூறலாம். நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியாவின் பிற மொழிகளில் உள்ள வற்றை மொழிபெயர்த்து எழுத உதவி செய்து வருகின்றது. இந்திய மொழிகளில் உள்ள புதினங்களை மொழிபெயர்த்துத் தருவதால், இந்தியாவின் பல்வேறு இடங்களிலுள்ள மக்களின் பண்பாட்டு, பழக்க, வழக்கங்களையும் பிற செய்திகளையும் அறிந்து கொள்ளச் செய்ய வேண்டும் என்பதை இந்நிறுவனத்தின் நோக்கமாகக் கூறலாம். என்.சி.பி.எச் என்னும் நிறுவனம் ருசியப் புதினங்களைத் தமிழில் மொழிபெயாத்து அளித்து வருகின்றது.

### துப்பறியும் புதினங்கள்

ஆங்கிலத் தழுவல்களும், மொழி பெயர்ப்புகளும் மிகுதி யான துப்பறியும் புதினங்களைத் தமிழுக்குத் தந்தன. தொடக்கக் காலத்தில் ஆரணி குப்புசாமி முதலியாரும், வடுவூர்

துரைசாமி ஐயங்காரும் முன்னணியில் நின்றனர். இவர்கள் மிகுதியான துப்பறியும் புதினங்களைத் தமிழில் மொழிபெயர்த்தெழுதினர். இவர்கள் மொழிபெயர்த்ததோடன்றி தாங்களும் பல துப்பறியும் புதினங்களை எழுதினர். இவை மிகுதியாக மக்களை ஈர்த்தன. இதனால் இவர்கள் தமிழ்ப் புதின வரலாற்றில் தனியிடம் பெற்றனர்.

பின்னர் பலரும் மனம் போனவாறு துப்பறியும் புதினங்கள் என்ற பெயரில் தேவையற்ற கதைகளை எழுதலாயினர். இதனால் துப்பறியும் புதினங்களுக்கு இருந்த செல்வாக்கு குறையத் தொடங்கியது. துப்பறியும் புதினங்கள் சமுதாயத்தைத் தேவையற்ற பாதையில் இழுத்துச் செல்கின்றன என்றும், மக்கள் மனதைக் கெடுத்ததாகக் கிளம்பின.

ஆனால் இவற்றைப் பொழுதுபோக்குப் புதினங்கள் என்று கூறிப் "பொதுநிலையில் நாவல் படிப்போர் எண்ணிக்கையைப் பெருக்கி, நூல் படிக்கும் பழக்கத்தை ஏற்படுத்திய பெருமை இத்தகைய நாவல்களுக்கு உண்டு"[38] என்று கூறுவார் ம. செ. இரபிசிங்.

இவர் கூறியது போன்று புதின உலகின் தொடக்கக் காலத்தில் புதினங்களைப் படிப்பவர் எண்ணிக்கையை மிகுதிப்படுத்திய பெருமை இவற்றுக்குண்டு. ஆனால் இத்துப்பறியும் புதினங்கள் மக்களிடையே சிந்தனையை எழுப்பாமல் உணர்ச்சியைக் கிளறி விடக் கூடியனவாகவே அமைந்தன.

"'ஒன்றோ இரண்டோ விட புருஷர்கள், இரண்டோ மூன்றோ நாணமற்ற கன்னியர்கள், ஒரு துப்பறியும் கோவிந்தன் அல்லது கோபாலன், ஓர் ஆகாவழி ஜமீந்தார்—தமிழ் நாவல் பூர்த்தியாகி விடுகிறது. தற்காலத்தில் துப்பறியும் நாவல்களெல்லாம் பிற நாட்டு பழக்க, வழக்கங்களையும், மனோபாவங்களையும் தமிழகத்தில் பரப்பித் தமிழ் மக்களை அனாசாரப் படுகுழியில் தலைகீழாக வீழ்த்துகின்றன. நாவல்களின் தன்மை இன்னதென்று அறியாத தமிழ் மக்களும் இந்த நாவல் புற்றீசல்களைக் கோழி விழுங்குவது போல் விழுங்கித்

---

38. ம. செ. இரபிசிங், 'பொழுதுபோக்கு நாவல்கள் நூறாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி, பக். 83.

திருப்தி அடைகின்றனர்'' [39] என்று முத்து மீனாட்சி என்ற நூலின் முன்னுரையில் வரகவி. அ. சுப்பிரமணிய பாரதி கூறு கின்றார்.

அக்காலத்தில் வெளிவந்து கொண்டிருந்த துப்பறியும் புதினங்கள் ஒரே போன்ற வடிவத்தை அடிப்படையாகக் கொண்டு பலப்பலவாய் எழுந்து கொண்டிருந்தன என்ற உண்மையை இவரது கூற்று தெளிவுபடுத்துகின்றது. இதனுல் அப்புதினங்களின் மையக் கருவும், அவை தெரிவிக்க வந்த செய்தி யும் ஒன்றாகவே அமைந்து விட வாய்ப்புண்டாகின்றது.

ஆனுல் சொ. பழனியப்பச் செட்டியார், பண்டித நடேச சாஸ்தியார், ஆரணி குப்புசாமி முதலியார் போன்றோர் துப்பறி யும் புதினங்கள் மக்களுக்கு நன்மை பயக்கக் கூடியன என்று தங்கள் எழுத்தில் உறுதி கூறுகின்றார்கள்.

''நாட்டின் முன்னேற்றங் கருதி வரையப்படும் உயர்ந்த நூல் களைப் போலவே 'நாவல்' என்ற நூலும் படிப்பவர் உள்ளத்தை யீர்த்து மகிழ்வூட்டுதலை முதற்கருத்தாகவும், அத்துடன் நல்லறிவூட்டலை உட்கருத்தாகவும் கொண்டது என்று கூறலாம். நல்லறிவை மேற்கோளோடு உணர்த்தும் போது நன்னடக்கை யுடையவர்களின் செயல்களைக் கூறி 'நாமும் இங்ஙனம் நடந்து கொண்டால் அவர்களைப் போல் நன்மை யடையலாகும் என்று உணரும்படி செய்வதும், அங்ஙனமே தீயோரின் செயல்களைக் கள் பிறகு அடையும் துன்பம், தண்டனை முதலியவைகளை விளக்கிக் காட்டி அத்தகைய செயல்கள் தகாதவையென்று கண்டித்துக் கூறுதலும், புதுவது புனையும் ஆசிரியர்களின் நோக்கமாகும். சிலர் இவற்றை யுணராமல் கண்மூடித்தனமாய் நாவல்கள் தீமை பயப்பன' என்று கூறு கின்றனர்...

நமது நாட்டுச் சான்றோர்கள் நமக்குத் தந்துள்ள அரும் பெரும் நூல்களிலும் தீயன புரியும் கொடியோர் கதைகள் அடங்கி யிருக்கின்றன... தீயன புரிவோரின் செயல் விரவுவதாலேயே ஒரு நூலைத் தகாது என்று இகழாமல், எந்நூலைப் படித்தாலும் அதன் கண் தொடர்புடையவர்களான ஒவ்வொருவரின் நிலை

39. அ. சுப்பிரமணிய பாரதி, 'முன்னுரை', முத்து மீனாட்சி. அ. மாதவையா, (சென்னை, 1981).

யையும், பிறகு அவர்கள் அடையும் பயனையும் சீர் தூக்கித் தீமை பயக்கும் நடக்கைகளை நீக்கி, நன்மை பயக்கும் நடக்கைகளையும், பண்பையும் மேற்கோடலே அறிவுடைமைக் கழகாகும்''[40] என்று கூறியிருக்கிறார்: சொ. பனையப்ப செட்டியார்.

ஆனால் புதுவது புனையும் எழுத்தாளர்கள் தீமைகளைக் கூறி, அவற்றைச் செய்யாதீர்கள் என்று அமைப்பதை விட நல்லதைக் கூறி இது போல் நடக்க வேண்டும் என்று அறிவுரை கூறுவதே போதுமானது என்று தோன்றுகின்றது கூற வேண்டி நல்லுரைகள் மிகுதியாக இருக்க, அவற்றை விட்டுத் தீயன வற்றை எடுத்துக் காட்டி, அவற்றின் வழி நல்ல அறிவுரைகளைப் புகட்டுகிறோம் என்று முயல்வது ஏற்புடைத்தாகத் தோன்ற வில்லை.

இத்தகைய புதினங்களின் மிகுதிக்கு அந்நாளில் ஆங்கிலப் புதினங்களின் தாக்கம் தமிழ் எழுத்தாளர்களிடம் மிகுதியாக இருந்ததே ஆகும்.

'தானவன் என்ற போலீஸ் நிபுணன் கண்டுபிடித்த அற்புதக் குற்றங்கள்' என்று தான் எழுதிய புதினமே தமிழில் துப்பறியும் புதினம் எழுதும் முயற்சியில் மேற்கொண்ட முதல் நூல் என்று குறிப்பிடுகின்றார் பண்டித நடேச சாஸ்திரியார். போலீஸ் இலாகாவில் உள்ளவர்களுக்கு உதவ வேண்டும் என்று இலாகாத் தலைவர் கர்னல் போர்ச்சியஸ் துரை கேட்டுக் கொண்டபடி தாம் இப்புதினத்தை எழுதியாக அவர் குறிப்பிட்டுள்ளார்.

ஆரணி குப்புசாமி முதலியார், ''மதன பூஷணம் அல்லது இறந்தவன் பிழைத்தது' என்னும் நூலின் பாயிரத்தில், துப்பறியும் கதைகளை வாசிப்பதால் ஒரு காரியத்தைச் செய்யத் துணியு முன் தீர்க்காலோசனை செய்து பிறகு செய்யத் துணியும் பழக்கமும், புத்தி கூர்மையும், மனிதர்களுடைய சுபாவத்தைத் திருஷ்டி மாத்திரத்தால் அறிந்து கொள்ளும் சாமர்த்தியமும் உண்டாகும். இத்தகைய அனுபவங்கள் உண்டாவதற்கு நாம் இத்தகைய கதைகளை வாசிக்கும் போது, துப்பறியும் ஆசாமியின்

---

40. சொ. பனையப்ப செட்டியார், காந்திமதி, 2ம் பதிப்பு (சென்னை, 1929), முன்னுரை.

செயல்களை ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் முன்னாடி யூகித்துக் கொண்டு பிறகு துப்பறிபவனுடைய நடச்கை நயது யோசனைக்கு ஒத்திருக்கிறதாவென்று பார்த்துக் கொள்ள வேண்டும். ஆரம் பத்தில் நமது யோசனை துப்பறிபவன் யோசனைக்கு மாறுபட் டாலும், நாம் விடாமல் முன்னாடி யோசிப்பதைப் பழகிக் கொண்டே வந்தால், வர வர, நமது யோசனைக்கு துப்பறிபவன் யோசனைக்கு ஒத்து வரும். இப்படி பழகுவதால் நமது புத்தி கூர்மை யடைவதோடு நாம் முன் கூறிய நல்ல அனுபவங்களும் கை கூடும்''[41] என்கிறார்

இக் கூற்றுகள் துப்பறியும் புதினங்கள் தேவையென்றும், இல்லையென்றும் தமிழ் எழுத்தாளர் உலகில் பெரும் போராட்டமே நடந்து வந்தது என்பதையும் அதையும் மீறி இவ் வகைப் புதினங்கள் புற்றீசல் போல் கிளம்பி வெளி வந்து கொண் டிருந்தன என்பதையும் உறுதி செய்கின்றன. ஆனால் இவை மக்களிடையே மிகுதியான செல்வாக்குடன் விளங்கின என்பது வெளிப்படை.

பி. ஸ்ரீ, தம் நூலில், ''குசேலர் குபேரர் ஆனார் என்று சொல்லும்படி அல்லயன்ஸ் ஐயருக்கும் பொருள் சேர்ந்து விட்டது. உலகப்போர் ஒன்றை முன்னிட்டுத் தொலைதூரங் களில் தொண்டாற்றி வந்த தமிழ்ச் சிப்பாய்களுக்காக ஏராள மாய்க் கதைப்புத்தகங்கள் முதலியவற்றை அன்றைய ஆங்கில அரசினர் விலைக்கு வாங்கி அனுப்பிய காலம் அது''[42] என்று கூறியிருப்பது தமிழ்க் கதைப்புத்தகங்கள் மிகுதிக்கு ஆங்கில அரசும் ஒரு காரணமாய் அமைவதைக் காட்டுகின்றது. போரில்லாத கால இடைவெளிகளில் பொழுதைப் போக்குதற் கென்று போர் வீரர்களுக்கு அளிக்கப்பட்டன ஆதலால், அவை பெரும்பாலும் துப்பறியும் புதினங்களாகத் தான் இருந்திருக்க வேண்டும். புற்றீசல் போல் இவ்வகைப் புதினங்கள் மிகுதிப் பட்டமைக்கு இதையும் ஒரு காரணமாய்க் கூறலாம்.

துப்பறியும் புதினங்களில் இரண்டு வகையைக் கூறலாம். துப்பறியும் நிகழ்ச்சிகளை முழுமையாகக் கொண்ட கதைகள் ஒரு

---

41. ஆரணி குப்புசாமி முதலியார், மதன பூஷணம் அல்லது இறந்தவள் பிழைத்தது, 5ம் பதிப்பு (சென்னை, 1952), பாயிரம்

42. பி. ஸ்ரீ. நான் அறிந்த தமிழ் மணிகள், (சென்னை, 1971), பக். 313.

வகை. துப்பறியும் கதை என்னும் பெயரில் தேவையற்ற வருணனைகளையும், கீழ்த்தரமான நிகழ்ச்சிகளையும் காட்டிச் செல்வன மற்றொரு வகை. ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி ஐயங்கார், தமிழ்வாணன் போன்றோர் புதினங்களை முதல் வகையில் குறிப்பிடலாம். ஆர்.எஸ். மணி, பி.டி. சாமி, மேதாவி, மாயாவி, மனோகரன் போன்றோர் துப்பறியும் புதினங்களை மிகுதியாக எழுதியவர்களாவர்.

துப்பறியும் புதினங்கள் மற்றப் புதினங்களை விடப் படிப்போர்க்கு விறுவிறுப்பை ஊட்டக் கூடியன என்பர்.

'குழந்தைகள் விரும்பிக் கதை கேட்பது போன்று, தொடர்ந்து கேட்கவோ, படிக்கவோ நினைக்கும் சூடும் சுவையும் துப்பறியும் நூல்களில்தான் இருக்கின்றன. தொடக்கம் முதல் முடிவு வரை ஒரே மூச்சில் படிக்கும் ஆர்வத்தைத் தாத்தா, பாட்டிகள் பேரக்குழந்தைகளுக்குத் தருவது போல, துப்பறியும் கதாசிரியர்கள் தாம் வாசர்களுக்குத் தருகிறார்கள்'' என்பார் சுகி.

இவற்றை 'நிகழ்ச்சி நாவல்' என்ற வகையில் அடக்குவார் சுப. சேதுபிள்ளை. கதைக் கட்டமைப்பில் முக்கியமானது ஆச்சரியக் கூறு அல்லது மர்மம். இதைத் துப்பறியும் கூறு என்றும் அழைக்கலாம். 'நிகழ்ச்சி நாவலில் செயற்பாடு தான் முக்கியம். பாத்திரங்கள் கதையமைப்பிற்குத் துணை செய்வனவே' என்ற நிகழ்ச்சி நாவல் இலக்கணமும், துப்பறியும், மற்றும் மர்மத் தழுவல் நாவல்களுக்கும் பொருந்தி வருவதைக் காணலாம். ஆகவே மாற்றாந்தாய் மனப்பான்மையில் நம் திறனாய்வாளர் பலராலும் ஒதுக்கப்பட்ட தழுவல் நாவல்கள் 'நிகழ்ச்சி நாவல்' என்ற வகையைச் சேரும் என்பது உறுதி''[43] என்பார் இவர்.

ஸ்ரீமகள் பதிப்பகம், வாசு பிரசுரம். பிரேமா பிரசுரம் போன்றவை துப்பறியும் புதினங்களை வெளியிடுவதில் குறிப்பிடத் தக்க பதிப்பகங்களாகும். இவை இன்றும் இவற்றைத் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றன.

---

43. சுப. சேதுபிள்ளை, 'ஒளி பரவட்டும்', மு. இராமசுவாமி (பதிப்பாசிரியர்). (மதுரை, 1975), பக். 53.

**வரலாற்றுப் புதினங்கள்**

வரலாற்றுப் புதினங்கள் சமுதாயப் புதினங்களை விடக் கருத்தூன்றி எழுதப்பட வேண்டியனவாகும். காலமும், களமும் நன்கு கவனித்து, கதையை அமைத்துச் செல்லல் வேண்டும்.

'வரலாற்று நவீனங்களை இயற்றப் புகுவோர்க்கு இலக்கியப் பயிற்சி இருக்தலோடு பண்டை வரலாற்று நிலையைத் தம் அகக்கண் முன்னே கொணர்ந்து நிறுத்தி, அச்சூழ்நிலையில் தமது கதையை அமைத்து, அவ்வமைப்பிற்கேற்பக் கதையைப் புனைய வேண்டிய கட்டுப்பாடும் வேண்டும். வரலாற்றுச் சூழ்நிலையில் லாமல், மானிடப் பண்பைப் பொதுப்படையாகச் சமூகச் சூழ்நிலையில் வைத்து இல்லன புனையும் குறிக்கோள் ஒன்றினையே மேற்கொள்ளும் ஆசிரியர்களது படைப்புக்கள் வெறும் கதைகளாம். இத்தகைய கதைகள் எழுதுவோர்க்கு இலக்கியப் பயிற்சியும், கற்பனைத் திறனும் மட்டும் இருந்தால் போதும். இங்ஙனமின்றி ஆசிரியரால் வரையறுக்கப்படாமல், தானே ஒரு வரையறைக்குட்பட்டு நிற்கும் வரலாற்றுச் சூழ்நிலையில் கதையை அமைத்துவிடும் ஆசிரியரது கற்பனை கட்டுக்கடங்காமல் திரிய முடியாது. வரலாற்று கட்டுக்கு அடங்க வேண்டும். வரலாறு வரையறுக்காத இடங்களில் தமது கற்பனைத் திறனைக் காட்டலாமாயினும் இக்கற்பனைகள் வரலாற்று உண்மைகளோடு முரணாகாதவாறு அமைய வேண்டும். ஆதலால் வரலாற்றுக் கதைகள் எழுதுவோர்க்கு வெறுங்கதைகளை யாப்பவர்களை விட இலக்கியப் பொறுப்புணர்ச்சி மிகுதியாக இருத்தல் வேண்டும்''[44] என்று வரலாற்றுப் புதினங்களை எழுதுவோர்க்குப் பொறுப்பு தேவை என்பதைக் கூறுகின்றார் ந. சுப்பிரமணியன்.

தமிழில் எழுந்த வரலாற்றுப் புதினங்கள் சுதந்திர உணர்ச்சி தூண்டல்களாக உதவின. குறிப்பாகக் கல்கியின் புதினங்களை இவ்வகையில் கூறலாம். கல்கியின் சிவகாமியின் சபதம் பார்த்திபன் கனவு, பொன்னியின் செல்வன் ஆகிய புதினங்கள் புராதனத் தமிழ்ப் பெருமையுணர்வைப் பின்னணியாகக் கொண்டு. அதன் மூலமாகச் சுதந்திர தாகத்தை வளர்க்க உதவின என்கின்றார் கா. சிவத்தம்பி.[45]

---

44. ந. சுப்பிரமணியன், 'முகவுரை', பக். 4-5. கடல்புறா, சாண்டில்யன். (சென்னை, 1967)
45. கா. சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும், பக். 28.

வரலாற்றுப் புதின எழுத்தாளர்களின் கற்பனைத் திறனை, அழகிய உவமை கூறி விளக்குகின்றார் பூவண்ணன்.

"ஆற்றில் மிதந்து வந்த கூந்தலிழையை வைத்து, தான் அதற்கு முன் காணாத பெண்ணின் உருவத்தை உள்ளவாறு அமைத்து விட்ட ஓவியனைப் பழங்கதைகளில் பார்த்திருக்கிறோம் அந்த ஓவியனின் உள்ளம் பெற்றவர்கள் எழுத்தாளர்கள். எனவே கூந்தலிழையைப் போன்ற ஒன்றிரண்டு வரலாற்று நிகழ்ச்சிகளையும் குறிப்புகளையும் கொண்டு அற்புதமான சரித்திர நாவலை உருவாக்கி விடுகின்றனர்[46]" என்பர் இவர்.

தமிழ்ப் புதின உலகின் தொடக்கக் காலத்தில் சில வரலாற்றுப் புதினங்கள் தோன்றிய போதிலும். இவ்வகைப் புதினங்களுக்குப் புதின உலகில் ஒரு தனிபீடத்தை அமைத்துத் தந்தவர் கல்கி.

"சரித்திர இலக்கியத்தைச் சுவை மிக்க இலக்கியம் என்று வழிகாட்டியவர் ஸ்ரீகல்கி அவர்கள். பள்ளியிலும், கல்லூரியிலும் படிக்கும்போது அச்சுப் பிரதியில் ஓசை நயங்கொண்ட வெறும் பெயர்களாகவே தோன்றியதை, உயிரும் உணர்வும் கொண்ட மனிதர்களாக ஆசாபாசங்களும், காதலும், வீரமும் விரவிக் கிடந்த வாழ்க்கை நடத்தியவர்களாக, தனது திறமை எனும் மந்திரக்கோலால் நம் முன் நிறுத்தியவர் அவர்"[47] என்பார் பிருந்தா வரதராஜன்.

அவர் எழுதிய பொன்னியின் செல்வன், சிவகாமியின் சபதம், பார்த்திபன் கனவு போன்ற வரலாற்றுப் புதினங்கள் அனைத்தும் புகழ் மிக்கன. இப்புதினங்களில் பண்டைத்தமிழ் மக்களின் சிறப்பையும் நாட்டின் புகழையும் வெளிப்படுத்தினார். நெஞ்சை விட்டகலாது உறையும் கற்பனை மாந்தர்களை வரலாற்று மாந்தருடன் படைத்தார். பார்த்திபன் கனவைப் படித்தவர்கள் அதில் வரும் பொன்னனையும், வள்ளியையும் மறக்க முடியாது.

இவர் ஒரு புதினத்தை எழுதுமுன் தாம் அதில் கூற வந்ததை பற்றி நனகு அறிந்த பின்னரே அதனை எழுதுவார். சிவ்காமியின்

---

46. பூவண்ணன், 'வீரபாண்டியன் மனைவி', தமிழ் நாவல்கள், பக் 47.
47. பிருந்தா வரதராஜன், 'நந்திபுரத்து நாயகி', தமிழ் நாவல்கள், பக் 34.

சபதம் என்னும் புதினத்தை எழுதுமுன் பல நாட்கள் மகாபலி புரம் சென்று அங்குள்ள சிற்பங்களையும், வேலைப்பாடுகளையும் நுணுக்கமாகக் கவனித்து, அதன் பின்னரே அப்புதினத்தை எழுதியதாகக் கூறுவர்.

''ஒரு விஷயத்தை எழுது முன் அதைப் பற்றிய சகல விஷயங் களையும் படித்து அறிந்து கொண்ட பின்னரே கல்கி பேனாவைக் கையிலெடுப்பார். 'சிவகாமியின் சபதம் எழுதும் போது புத்த பிட்சுவைப் பற்றி எழுத வேண்டியிருந்தது. அதற்காக ஒரு நிஜ மான புத்த பிட்சுவையே அழைத்து வந்து தம் வீட்டிலேயே ஒரு விருந்தாளியாகத் தங்க வைத்து, அவரது நடை, உடை, பாவனைகள், பழக்க வழக்கங்களைக் கல்கி கவனித்து வந்த உண்மை பலருக்குத் தெரியாது''[48] என்று சாவி கூறியிருப்பதும் இதற்குச் சான்றாகும்.

கல்கிக்கு அடுத்தபடியாக வரலாற்றுப் புதினங்களை எழுது வதில் பெயர்பெற்று விளங்குபவர் சாண்டில்யன். இவரது மலை வாசல், ஜீவபூமி, கடல்புறா, கடல் ராணி, யவன ராணி, ஜல தீபம், மன்னன் மகள் போன்ற அனைத்துப் புதினங்களும் புகழ் பெற்று விளங்குகின்றன. இவர் புதினங்களில் வருணனைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவ்வருணனைகளிலும் மகளிர் பற்றிய வருணனைகளும், ஆணும், பெண்ணும் மகிழ்ந்திருக்கும் காட்சி வருணனைகளும், இவரது புதினங்கள் விரசமாக எழுதப் படுகின்றன என்று சொல்லும் அளவிற்கு மிகுந்து காணப்படு கின்றன.

இவர்களோடு, விக்கிரமன், கோவி. மணிசேகரன், ஸ்ரீவேணு கோபாலன், ய. லட்சுமி நாராயணன், ஜெகசிற்பியன், அகிலன், சோமு போன்றோரும் வரலாற்றுப் புதினங்களை எழுதுவதில் குறிப்பிடத்தக்கவர்கள்.

**சிறுவர்ப் புதினங்கள்.**

''தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்'' என்பது பழமொழி, ஒருவனின் ஆளுமை அவனது வாழ்நாள் முழுவதும் மாறுவ தில்லை என்பது இதன் பொருள்.

---

48. சாவி, 'நண்பர் - வழிகாட்டி - குரு', அமுதசுரபி, (சென்னை, 1982), பக். 10.

குழந்தைப் பருவத்திலேயே ஆளுமை உருவாகி விடுவதால், 'குழந்தைகள் உள்ளத்தில் நல்ல பண்புகள், மனிதாபிமானம், சரியான கோட்டுபாடுகள் முதலியவற்றை ஏற்படுத்துவது குழந்தை இலக்கியத்தின் பணியாகும். ஒவ்வொரு புத்தகமும் குழந்தைகளின் ஆசிரியனாகவும் நண்பனாகவும் இருப்பதோடு, பொய்மை, அநீதி, கொடுமை ஆகியவற்றை எடுத்துப் போராடும் வீரனாகவும் விளங்க வேண்டும்.

ஒரு புத்தகத்தில் வர்ணிக்கப்படும் நிகழ்ச்சிகள் கூட அவ்வளவாக முக்கியமில்லை, குழந்தைகளின் உள்ளத்தையும், அறிவையும் அவர்களின் மூதாதையர்களின் இலட்சியங்களுக்காகத் தொடர்ந்து பாடுபடும்படி செய்யும் உணர்ச்சிகள் மூலம் வளப்படுத்துவது தான் முக்கியம். இப்படிப் பார்க்கும் பொழுது குழந்தைகள் முன்மாதிரியாகக் கொள்ளக் கூடிய நேர் நினையான கதாநாயகர்களைப் படைக்கும் முயற்சி போற்றத் தக்கது.

கல்வியிலும், குழந்தை வளர்ப்பிலும் இந்த அம்சத்தின் முக்கியத்துவம் வெளிப்படை. இரண்டாவது உலக யுத்தத்தின் போது ரஷிய வீரர்களைத் தோற்றுவித்தவை, இத்தகைய புத்தகங்களே. சோவியத் சிறுவர் சிறுமிகள் அவற்றை இன்னமும் விரும்பிப் படிக்கின்றனர்.

குழந்தை இலக்கிய எழுத்தாளர்கள், தங்கள் வாசகர்களிடம் நேர்மையாக நடந்து கொள்ள வேண்டும். வாழ்க்கை இன்ப மயமானது என்ற பொய் நம்பிக்கையை அவர்களுக்கு ஏற்படுத்தக் கூடாது. குழந்தைகளுக்காக எழுதப்படும் புதிய கதைகளில் பாத்திரங்களின் கடுமையான போராட்டங்களும் உள இயல் வாய்மையும் சிறந்த அம்சங்களில் சிலவாகும்.

''சுவையான இலக்கியங்களும், வெறும் பொழுது போக்குக் கதைகளும் ஒன்று என அசடர்கள் தான் நினைப்பார்கள் என்று ஒரு சிறந்த குழந்தை இலக்கிய எழுத்தாளர் ஒரு சமயம் கூறினார். சுவைபட எழுதுவது என்பது, குழந்தைகளின் மனதிற்குள் பிரவேசிக்கக் குறுக்கு வழியைப் பின்பற்றுவது என்பதாகும். ஒரு நல்ல எழுந்தாளர் எழுதும் சுவையான கதைகளிலும், நம்ப முடியாத கற்பனைக் கதை வடிவங்களிலும் கூட, சீரிய கருத்துக்கள் இல்லாமல் இருப்பதில்லை. அவை அன்றாடப் பிரச்சினைகளை விளக்குபவை, ஆகையால் எதார்த்த நிலையுடன் அவை

நெருங்கிய தொடர்பு உள்ளவையாகும்.'' என்று கூறுகின்றார் ருசிய எழுத்தாளர் செர்கீ மிகால்கோவ்.[49]

சிறுவர்க்கான புதினங்களில் துப்பறியும் புதினங்களும், மாயாஜாலப் புதினங்களும் மிகுதியாக எழுதப்பட்டு வந்தன. இவற்றுன் தேவை குறித்துப் பலவிதமாகக் கருத்துகள் வழங்கப் பட்டு வந்தன.

கொலை, கொள்ளை, மர்மம், மாயாஜாலம் போன்ற வற்றைக் காட்டிக் குழந்தைகள் உள்ளங்களில் திகைப்பையும், திகிலையும், அநாவசிய அச்சத்தையும், தேவையற்ற ஆர்வத்தை யும் கதை நெடுகக் கிளப்பிவிட்டுக் கடைசியில் நீதியாக ஒரு வரி யில் முடிக்கப்படும் புதினங்களால் பிள்ளையுள்ளங்களில் படியும் நற்பண்புகளைவிடத் தீய பண்புகளின் வேகமும், அளவுமே அதிகம் என உறுதியாகக் கூறுவார் பூவை அமுதன். மேலும் இவ்வாறு வெறுங் கனவுகளிலும் அதீதக் கற்பனையுலகிலும், அசாதாரண நிகழ்ச்சிகளிலும் நம் குழந்தைகளை மூழ்கடித்து விடுவது அவர்களுடைய எதிர்காலத்தை வீணாக்குவதாக அமை யும் என்பர் இவர்,[50].

சற்று வளர்ந்த குழந்தைகள் வீர, தீர, சாகசக் கதைகளை விரும்பிப் படிக்கின்றனர் என்பதற்காகத் திருட்டு, கொலை, கொள்ளை ஆகியவற்றை மையமாக வைத்துக் கதை படைப்பது சரியன்று என்றும் அறத்தை அடிப்படையாகக் கொள்ளாத எந்தச் செயலும் வீரமாகாது என்றும் கூறுகின்றார் அழ. வள்ளி யப்பா. ஆனால் தேவதைக் கதைகளையும், பிராணிகளின் உரை யாடல்கள் அடங்கிய கதைகளையும், சின்னஞ்சிறு வயதிலே கேட்டாலும், நாளடைவில் உண்மைக்கும், கற்பனைக்கும் உள்ள வேற்றுமையைக் குழந்தைகள் எளிதிலே உணர்ந்து கொள்வர்' என்று உளவியலார் திட்டவட்டமாகக் கூறுவதால் அக்கதைகள் ஏற்புடையனவே என்பார் இவர்.[51]

---

49 (மொழி பெயர்ப்பாசிரியர்). 'குழந்தை இலக்கியம்' ராணிமுத்து, (சென்னை, 1983), பக்.6.

ாவல்' குழந்தை இலக்கியம் ஒரு சன்னை, 1976), பக்.93.

51 அழ.வள்ளியப்பா, 'நாவல்கள்' வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம், (சென்னை, 1981), பக்.82.

குழந்தைகள் புதின எழுத்தாளர்களாகத் தமிழ்வாணன், பூவண்ணன், வாண்டு மாமா, நெ.சி.தெய்வ சிகாமணி, ஆர்.வி, தங்கமணி, ரேவதி, கே. ஜெயலட்சுமி ஆகியோரைக் குறிப்பிட லாம்.

வட்டார வழக்குப் புதினங்கள்

பேச்சு மொழி அமைப்பின் ஒரு வளர்ந்த நிலையே வட்டார வழக்குப் புதினங்கள் எனலாம். ஒரு குறிப்பிட்ட மாவட்டத்தின் பண்பாடும், பேச்சு வழக்கும், நிலப்பகுதி அமைப்பும் ஆகிய வற்றைக் கொண்டு இவ்வகைப் புதினங்கள் உருவாக்கப்படுகின் றன. ஆனால் ஒரு மாவட்டத்தைச் சார்ந்த புதினம் எழுது வதற்கு அம்மாவட்டத்தைப் பற்றிய பரந்துபட்ட அறிவு மிக இன்றியமையாது தேவைப்படுகின்றது. பொதுவாக அந்தந்த மாவட்டத்தைச் சேர்ந்த எழுத்தாளர்களே அந்தந்த வட்டார வழக்குப் புதினங்களைச் சிறப்புற அமைக்க இயலும்.

கோவை மாவட்டத்திற்கு ஆர். சண்முகசுந்தரமும் கன்னியா குமரி மாவட்டத்திற்கு நீல. பத்மநாபனும் குறிப்பிடத்தக்கவர் கள். மேலும், வடிவேலனின் தொட்டிகட்டு வீடு, நாஞ்சில் நாடனின் தலைகீழ் விகிதங்கள், ஹெப்சிபா ஜேசுதாஸின் புத்தம் வீடு ஆகிய புதினங்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை.

இவ்வட்டார வழக்குப் புதினங்களுக்குத் தொடக்கத்தில் எதிர்ப்புக் காணப்பட்டது. இதனை மறுத்து, இவ்வகைப் புதினங்களின் தேவையை வலியுறுத்துவார் கு. அழகிரிசாமி.

''நாவலில் கையாளும் பாஷை பற்றிச் சிலர் விசித்திரமான ஒரு கருத்தைச் சொல்லி வருகிறார்கள். தமிழ் நாட்டின் எல்லா ஜில்லாக்களிலும் உள்ளவர்களும், எல்லாப் பிரிவினரும் புரிந்து கொள்ளக் கூடிய சொற்களையும், சொல் வழக்குகளையுமே நாவலில் உபயோகிக்க வேண்டும் என்றும், மற்றப் பிரதேச வாசிகளுக்குப் புரியாத ஒரு குறிப்பிட்ட வழக்குகளைக் கையாள வே கூடாது என்றும் அவர்கள் சொல்கிறார்கள். நாவல் இலக் கியத்தின் அரிச்சுவடி கூடத் தெரியாதவர்களின் கூற்று என்றே இதைச் சொல்ல வேண்டும். குறிப்பிட்ட பிரதேசத்தில் கதை நடப்பதாக எழுதும்போது அந்த பிரதேச வழக்குகளைத் தான் கையாள வேண்டும். மற்றப் பகுதிகளில் உள்ளவர்களுக்குப் புரியாது என்றால் அவற்றிற்கு அநுபந்தத்திலோ வேறு தக்க

இடங்களிலோ விளக்கம் கொடுக்கலாம். அதை விட்டு விட்டு எல்லோருக்கும் புரிய வேண்டும் என்பதற்காகப் பிரதேச வழக்கு களை மாற்றி வேறு வார்த்தைகளைப் போட்டால், நாவலின் இலக்கியத் தன்மை செத்துவிடும். என்பதில் சந்தேகமில்லை''[52] என்கின்றார் இவர்.

மேலை நாடுகளிலும், இத்தகைய புதினங்களுக்கு எதிர்ப்பு கள் காணப்பட்டன. ''க்ரப் ஸ்ட்ரீட்டு குழுவினர், இலக்கணம் வெட்கித் தலை குனிய, நாட்டுப்புற வழக்காறுகள், நாகரிகமற்ற பிராந்திய மக்களின் பேச்சு வழக்குகள் என்னும் கெட்ட கலவை யைக் கலந்து, இலக்கியத்தை நாட்டுப்புறப் பாமர மக்களின் தரத்துக்குத்தாழ்த்தி, இழிவாக்க முயன்றிருக்கிறார்கள். இப் பொழுது நூல்களில் வழங்கி வரும் மெருகிட்ட சிறந்த நடையை அவர்கள் வேண்டும் என்றே இழிவு படுத்துகிறார்கள். இக்கல வையை எல்லாம் வேறு எந்த மொழியோடேனும் உறவுடைய வையாக இருக்கலாம், ஆனால் ஆங்கில மொழியோடு அவை சற்றும் உறவுடையவை அல்ல[53] என்று 'வசனமும் கவிதையும்' என்ற நூலில் வரும் பகுதி இதனை உணர்த்தும்.

இன்றும் அழகாபுரி அழகப்பன், சு.சமுத்திரம் ஆகியோர் வட்டார வழக்குப் புதினங்களை எழுதி வருகின்றனர்.

**குறும் புதினங்கள்**

இன்று தமிழ்ப் புதின உலகில் வளர்ந்து வரும் ஒரு வகை யாகக் குறும்புதினங்கள் காட்சி அளிக்கின்றன. புதினத்தைப் பற்றிய வரையறை இன்னும் முழுமை பெறாத நிலையில், குறும் புதினங்களும் வரையறைக்குட்படாதனவாய், வரையறையற்ற நிலையிலேயே காணப்படுகின்றன. எனினும் தமிழ் எழுத்தாளர் கள் குறும்புதினத்தைப் பற்றிய வரையறைகளைக் கூறி வருகின்ற னர்.

''குறுநாவல் எழுதுவது என்பது ஒரு தனிக்கலை. அது நாவலைவிட நீளத்தில் குறைந்தது; ஆனால் சிறுகதையை விட நீளமானது என்று பொதுவாக விளக்க முனைந்தாலும், இந்த விளக்கம் சரியான விளக்கமாகி விடாது, பரந்து பட்ட வாழ்க்கை

52 கு.அழகிரிசாமி, 'தலைமையுரை' தமிழ் நாவல்கள் பக். 118.

53 பெ.நா. அப்புஸ்வாமி (மொழி (பெயர்ப்பாசிரியர்), வசனமும் கவிதையும், (சென்னை, 1966), பக். 75.

யின் பல்வேறு அம்சங்களை முழுமையாக ஒரு நாவலில் காட்டுவது போல் காட்டாமல் அதே நேரத்தில் ஒரு நிகழ்ச்சியையோ அல்லது ஒருமை காட்டும் பல நிகழ்ச்சிகளையோ சிறுகதையில் காட்டுவது போல் காட்டாமலும் அமைவது குறுநாவல் என்று வேண்டுமானால் கூறலாம். நீளம் மட்டும் குறுநாவலை வரையறுத்து விடுவதில்லை என்றாலும், குறுநாவல்கள் பெரும்பாலும் நாவலுக்கும், சிறுகதைக்கும் இடையிலேயே தம் நீளங்களை வரையறுத்துக் கொள்கின்றன. சில குறுநாவல்கள் நாவல்களின் நீளத்திற்கு விரிவதும், சில நாவல்கள் குறுநாவல்களின் அளவுக்கு சுருங்குவதும், 'இலக்கிய உலகில் அப்படியொன்றும் காண முடியாத காட்சிகள் அல்ல''[54] என்பர் இரா. தண்டாயுதம்.

''பூரண நாவலாகவோ, சிறுகதையாகவோ சொல்ல முடியாத புனைகதைகளை குறும்புதினக் கதை என்பர் இரசிய நாவலிலக்கிய வளர்ச்சி குறுநாவலின் இலக்கியப் பயன்பாட்டை எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது. இரசிய மொழியில் குறுநாவல்கள் 'பொவெஸ்த்' எனக் குறிப்பிடப்படும். பொவெஸ்த்துக்களில் கதாநாயகனது மனோநிலைப்பட்ட சித்தரிப்பே முக்கியமாக அமைதுள்ளதென்பர். குறுநாவலை 'நாவலின் ஒரு அத்தியாயம்' என்று கூறுவோருமுளர்.

ஆயினும் தமிழில் குறுநாவல் என்பது சம்பவக்கோவைப் பிடியிலிருந்து முற்றிலும் விடுபடாதிருப்பது வெளிப்படை, குறுநாவலில் பாத்திரங்கள் குறைவெனினும் முக்கிய பாத்திரத்தின் மனோ நிலையை ஆழமாக ஆராயும் வழக்கு இன்னும் நன்கு தோன்றவில்லை என்று கூற வேண்டும். இன்றைய நிலையில் சஞ்சிகைகளில் வெளியீட்டு வசதிக்காக நாவற்சுருக்கங்களும், சுருக்கப்பட்ட நாவல்களுமே குறுநாவல்களாக வெளியிடப்படுகின்றன எனக் கூறத் தோன்றுகின்றன''[55] என்பர் கா. சிவத்தம்பி.

''சிறுகதையின் கட்டுக்குள் அடங்காமல் ஓடிச் சென்று — நாவலின் பிடிக்குள் சிக்காமல் சுய தன்மையுடன் நின்று விடும்

---

54. இரா. தண்டாயுதம், தற்காலத் தமிழிலக்கியம் (சென்னை, 1973), பக். 170.

55. கா. சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும், ப.ள் 62-635

தனித்த உருவமே குறுநாவலாகும். சொற்செட்டும்—கதைக்கு உயிரூட்டும் அத்யாவசியச் சம்பவங்களும், குறைந்த பாத்திரங்களும், ஆசிரியரின் தெளிந்த மனவோட்டமும் ஒன்றிணைந்து கச்சிதமாக வெளிப்படும் குறுநாவலாகும். இதற்கு இத்தனை பக்கங்கள் இருக்க வேண்டும் - இத்தனை கதாபாத்திரங்கள் உலாவர வேண்டும் – ஒரு மூட்டைச் சம்பவங்கள் திணித்திருக்க வேண்டும் என்னும் லட்சணங்களெல்லாம் வேண்டியதில்லை. ஒரு குறுநாவல் இருபது பக்கத்திலும் முடியலாம் - இருநூறு பக்கத்திலும் முடியலாம், ஆனால் கதையின் ஒருமைப்பாடு - சுயரூபம் கெடாமல் கடைசி வரையிலும் - நூல் பிடித்த போல் இருக்க வேண்டும். அப்படியானால் தான் படிப்பவர்களை இங்குமங்கும் நகரவிடாமல் கதையின் தன்மை பிடித்து வைத்திருக்க முடியும். இதற்கு நல்ல உதாரணம் திரு. கா. நா. சுப்ரமண்யத்தின் 'ஒரு நாள்'[56] என்று குறும்புதினத்திற்கு விளக்கம் கூறுவார் கர்ணன்.

சண்முக. முருகானந்தம் நாவலுடன் தொடர்புடைய ஒன்றாகக் குறும்புதினம் பற்றிக் கூறுகின்றார்.

''காவியத்தை மனதில் நினைந்து, வடிவம் உரையாய் இருக்கிற காரணத்தை மட்டுமே அவதானித்து 'வசன காவியம்' எனும் மகுடமிட்டு நாவலை இந்த நூற்றாண்டின் ஆரம்பகாலம் அழைத்ததைப் போல, நாவலை மனதில் கொண்டு கலை வடிவ வேற்றுமையை மனதில் தாங்கி நாவல் அளவுக்குப் பெருக இல்லாத காரணத்தால் இவைகள் குறுநாவல்களென அழைக்கப் பட்டிருக்கலாம்''[57] என்பார் இவர்.

காதல் இதயம் என்ற குறுநாவல் தொகுப்பிற்கு அணிந்துரை எழுதிய பெ. தூரன்'' நாவல்கள் எழுதுவதிலே. இது ஒரு நவீன மான வழி. அளவைக் குறித்து இதை ஒரு குறுநாவல் என்று கூற லாம்''[58] என்கிறார்.

---

56. கர்ணன், அதுவே நான். (மதுரை, 1976), முன்னுரை.

57. சண்முக. முருகானந்தம், 'யோகநாதனின் படைப் பிலக்கியம் ஒரு விமர்சனம்', (தூத்துக்குடி 1983), பக். 23.

58. பெ. தூரன், 'அணிந்துரை', காதல் இதயம், கு. பெரிய சாமி, (சென்னை, 1968).

தமிழில் குறும்புதினம் என்ற பிரிவைத் தொடங்கிய எழுத்தாளர் யார் என்பது புலனாகவில்லை. ஏறத்தாழ 1960 ஆம் நூற்றாண்டை ஒட்டி இவ்வகை ஏற்பட்டிருக்கலாம் என்று தோன்றுகின்றது. இவை கலைமகள் அமுதசுரபி போன்ற இதழ்களாலேயே வளர்க்கப்பட்டு வந்தன. இன்றும் இம்மாத இதழ்களோடு மங்கை, 'மங்கையர் மலர், மஞ்சரி, தீபம், தாமரை போன்ற இதழ்களும் குறும்புதினங்களை வளர்த்து வருகின்றன.

கி. ராஜேந்திரன் கல்கியின் கதைகளைப் பற்றிக் கூறுமிடத்தில், "தீபாவளி மலர்களில் கல்கி அவர்கள் எழுதியவற்றைச் சிறுகதைகள் என்பதை விடக் குறுநாவல்கள் என்பது பொருந்தும். ஒரு நீண்ட நாவலுக்குரிய சம்பவங்களைச் சுருக்கி நெடுங்கதையாக அவர் வழங்கிய போது விருவிருப்பு கூடி படிக்க சுவாரஸ்யமாக இருந்தது. அதே நேரத்தில் கதாபாத்திரங்களின் குணச் சித்திரங்கள் மனத்தில் நிலையான இடம் பெற்றன"[59] என்று கூறுகின்றார்.

கல்கி அவற்றை எழுதிய காலத்தில் சிறுகதை, புதினம் என்னும் இரண்டு பிரிவுகளே இருந்தமையால் இவை சிறுகதை என்றே கூறப்பட்டு வந்தன. குறும்புதினம் என்ற பிரிவு அக்காலத்தில் காணப்படாவிட்டாலும், குறும்புதின அமைப்பில் கல்கி கதைகள் எழுத அக்காலத்தில் முயற்சித்திருப்பதை இக்கதைகளினால் உணரலாம்.

உதய பானு, இளைய ராணி என்னும் தமது புதினங்களுக்கு எழுதிய முன்னுரையில் சாண்டில்யன், குறும்புதினங்களாக இருந்த அவற்றை விரிவாக்கிப் புதினங்களாக எழுதியதாகக் கூறுகின்றார்.

இன்று மாத இதழ்களான மணியம், கதிர், மாலைமதி போன்றவற்றில் வரும் புதினங்கள் பல, அவற்றின் ஆசிரியர்களால் குறும்புதினங்கள் எனவும் கூறப்பட்டு முன்னரே வெளி வந்திருப்பதைக் காணலாம்.

எனவே குறும்புதினம் என்னும் ஓர் இலக்கிய வடிவம், தமிழ் எழுத்தாளரிடையே இன்னும் ஒரு தெளிவான வரையறைக்குள் கட்டுப்படவில்லை என்றே நினைக்கத் தோன்றுகின்றது.

---

59. கா. ராஜேந்திரன், முன்னுரை, திருவழுந்தூர் சிவக் கொழுந்து, கல்கி, (சென்னை, 1967).

எனினும் இருக்கும் குறும்புதினங்களைக் கொண்டு பின்வரும் முடிவுக்கு வரலாம். புதினத்தை விடச் சற்றுக் குறைந்த அளவுடன் புதினத்திற்குப் போன்ற கதைச் கருவும் கொண்டு வருவன குறும்புதினங்கள். என்னும் புதினத்தோடு தொடர்பு பட்ட அளவு சிறுகதையோடு தொடர்புடையதாகத் தோன்ற வில்லை என்பதை இதன் பெயரே சுட்டி நிற்கின்றது. நீள் சிறு கதை என்று பெயர் வைக்காமல் குறுநாவல் என்று பெயரிட்டி ருப்பதால், அளவினால் மட்டுமின்றி, கதைக்கரு முதலிய வற்றாலும் புதினத்துடன் தொடர்புடையதாகவே இதனைக் கருத வேண்டியிருக்கின்றது.

**மாத இதழ்கள்**

இக்காலத்தில் மாதந்தோறும் புதினங்கள் மாத இதழ்களாக வெளியிடப்பட்டு வருகின்றன. இவற்றிற்கு முன்னோடியாக இந்நூற்றாண்டின் தொடக்கத்திலேயே இல்லத் தோழன் என்னும் இதழைக் காணலாம். 'இல்லத் தோழன் – இந்த இருதுப் பத்திரிகையின் ஒவ்வொரு' வெளியீடும் முடிந்த மனோகர மான ஒரு நவகதையாய் இருக்கும்' என்று இந்த இதழின் முகப்பில் கூறப்பட்டிருக்கின்றது. இதைப் போன்று கதா மஞ்சரி, மற்றும் சிலவும் மாதந்தோறும் புதினங்களை வெளி யிட்டு வந்துள்ளன.

இன்று ராணிமுத்து, மாலைமதி, நவரத்தினம், மேகலா, மணியன், கதைக் கதிர் நயன தாரா, கல்பனா, குங்குமச்சிமிழ் போன்ற பல மாத வெளியீடுகள் காணப்படுகின்றன. ராணி முத்து இவற்றில் பழமையானது. புதிதாக எழுதப்படும் புதினங்களுடன் முன்பே வெளிவந்த புதினங்களின் சுருக்கங்களை யும் இம்மாத வெளியீட்டில் காணலாம்.

பொதுவாக மாத வெளியீடுகளில் லக்ஷ்மி, சுஜாதா, சிவசங்கரி, இந்துமதி, வாசந்தி, புஷ்பா தங்கதுரை, ராஜேந்திர குமார் போன்ற புகழ்பெற்ற எழுத்தாளர்களின் கதைகள் வெளி வருகின்றன. இவற்றோடு ஒருசில இளம் எழுத்தாளர்களின் புதினங்களையும் மாத வெளியீடுகளில் காணலாம். இவை மிகுதி யாக விற்பனை செய்யப்படுவதால் இவற்றில் எழுதும் எழுத் தாளர்களை விரைவில் பலருக்கும் அறிமுகம் செய்து வைக்க வாய்ப்புண்டாகின்றது. ஆனால், இவை பெயர்பெற்ற எழுத் தாளர்களின் புதினங்களையே பெரும்பாலும் வெளியிடுவதால்,

இளம் எழுத்தாளர்கள் அறிமுகம் பெறும் வாய்ப்பு தடைப்படு கின்றது. புகழ்பெற்ற ஆசிரியர்களின் புதினங்களை வெளியிடு வதாலேயே இவற்றின் விற்பனை மிகுதியாக அமைகின்றது என்ற கருத்தும் நம்பப்படுகின்றது.

மாத வெளியீடுகளின் விற்பனை மிகுதிக்கு அவற்றின் விலை மலிவே முதற் காரணமாய்க் கூற வேண்டும். முன்னாட்களில் புதினங்கள் விற்பனை மிகுதியாகக் காணப்பட்டது. பல நூல் கள் பலப்பல பதிப்புகள் வெளிவந்திருப்பதைக் காணலாம். இக் காலத்தில் மிகச்சிறந்த புதினங்கள் கூட அத்தகைய எண்ணிக்கை பதிப்புகளைக் கொண்டதில்லை.

புதினங்களை வாங்கினாலும் அவற்றை விலைக்கு வாங்கிப் படிப்பவர்கள் எண்ணிக்கை மிகக் குறைவு. வார, மாத இதழ் களில் தொடர் கதைகளாக வெளிவரும் புதினங்களைப் படித்து அவர்கள் தங்கள் புதினம் படிக்கும் விருப்பத்தை நிறைவேற்றி வந்தார்கள். இத்தகைய நிலையில் மாத வெளியீடுகள் முழுமை யான புதினங்களைக் குறைந்த விலையில் வெளியிடுவதால் அவற்றிற்கு மிகுந்த வரவேற்பு காணப்படுவது இயல்பே.

இன்று அலுவலகம் செல்லும் பெண்கள் பேருந்துகளில் செல்லும் பொழுதும் (நின்று கொண்டும், உட்கார்ந்தும்). பேருந்துக்காகக் காத்திருக்கும் பொழுதும், அலுவலக இடை வேளை நேரத்திலும் புதினங்களைப் படித்துக் கொண்டிருப் பதைக் காணலாம். இத்தகைய ஒரு விரைவான காலப்போக்கில் மாத வெளியீடுகள் அவர்கள் படிப்பதற்கு ஈடு கொடுக்கும் வண்ணம் தோன்றியிருக்கின்றன.

### வெளிநாட்டுத் தமிழ்ப் புதினங்கள்

தமிழ்ப் புதினங்கள் தமிழ் நாட்டில் மட்டுமன்றி, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் போன்ற வெளிநாடுகளிலும் பல தமிழ் எழுத்தாளர்களால் எழுதப்பட்டு வருகின்றன. ஆரம்ப காலத் தில் தமிழ்நாட்டில் நிலவியது போலவே அங்கும் புதினங்கள் தொடக்க காலத்தில் துப்பறியும் புதினங்களாகவும், தழுவல் களாகவும் வந்து கொண்டிருந்தன. இப்போது மக்களின் அன்றாட வாழ்க்கைச் சிக்கல்களையும், சமுதாய முன்னேற்றத் தையும் அடிப்படையாகக் கொண்டு, சமுதாயத்துக்குப் பயன் தரும் புதினங்களை எழுதி வருகின்றனர்.

இலங்கையின் முதலாவது தமிழ்ப் புதினம் 1890 ஆம் ஆண்டில் எஸ். இன்னாசித் தம்பியால் எழுதப்பட்ட 'ஊசோன் பாலந்தை கதை' என்ற தழுவல் புதினம் என்பர். ஆனால் 1856 இல காவலப்பன் கதை என்னும் மொழிபெயர்ப்புப் புதினம் ஈழத்தில் உருவாகியது என்பார் மு. கணபதிப் பிள்ளை.[60] புதின இலக்கியத்தின் தொடக்கக் காலத்தில் சி. வை சின்னப்ப பிள்ளை குறிப்பிடத் தக்க புதின ஆசிரியராகத் திகழ்ந்தார். "முதன் முதலாக அதிக நாவல்களை எழுதி நாவல்களை அந்தக் காலத்தில் விரும்பிப் படிக்கும் ஒரு இலக்கிய உருவமாக ஆக்கித் தந்தவர் இவர் என்று சொல்வது தவறன்று..."[61] என்பார் சில்லையூர் செல்வராசன். இடைக்காடர், செல்வ நாயகம், நெல்லையா, இளங்கீரன், செ. கணேசலிங்கன் போன்றோரும் குறிப்பிடத் தக்க தமிழ்ப்புதின ஆசிரியர்களாவார். இக்காலத்தில் இருபதுக்கும் மேற்பட்ட பெண் புதின எழுத்தாளர்கள் ஈழத்தில் உருவாகியிருப்பதைக் காணலாம்.

### புதிய வளர்ச்சி

புதினங்களைப் பொறுத்த வரையில் பதிப்பகங்களின் தொண்டு அளவிடற்கரிதாய் உள்ளது. அக்காலத்தில் அல்லயன்ஸ், ஆனந்த போதினி, ஸ்டார், ஸ்ரீமகள், ஒற்றுமை ஆபீஸ், கலைமகள் போன்றவற்றைக் குறிப்பிடத் தக்கனவாய்க் கூற லாம். இவை புதினங்களை மிகுதியான அளவில் வெளியிட்டு அவை மக்களிடம் செல்வாக்குப் பெற்று அவ்விலக்கிய வகை வளர்ச்சி பெறுவதற்குக் காரணமாயிருந்தன. இன்று நூற்றுக் கணக்கான பதிப்பகங்கள் புதினங்களை வெளியிட்டு வருகின்றன. அவற்றில் வானதி, கலைஞன், மீனாட்சி, அபிராமி, அருணா, அருணோதயம், பழனியப்பா, பாரதி பதிப்பகம், முதலியன குறிப்பிடத்தக்க பதிப்பகங்களாகும். வேறு சில பதிப்பகங்கள் தரமற்ற புதினங்களை வெளியிட்டு வருகின்றன. அப்புதினங்களால் மக்கள் கெடுவதற்கு, அவற்றை எழுதியவர்களுடன் அவற்றைப் பதிப்பித்தோரும் குறிப்பிடத்தக்க காரணமாக அமைகின்றார்கள் எனலாம்.

---

60. மு. கணபதிப் பிள்ளை, 'முன்னுரை', சில்லையூர் செல்வராசன், ஈழத்தில் தமிழ் நாவல் வளர்ச்சி, (சென்னை, 1967), பக். 11-12.

61. சில்லையூர் செல்வராசன், ஈழத்தில் தமிழ் நாவல் வளர்ச்சி, பக். 21.

புதினப் போட்டிகளை நிகழ்த்திப் பரிசளித்து, அதன் மூலம் எழுத்தாளர்களை ஊக்குவிப்பது, புதின வளர்ச்சிப் பணியில் குறிப்பிடத்தக்கது கலைமகள் வழங்கும் நாராயண சுவாமி ஐயர் பரிசுப்போட்டி இவ்வகையில் பழமையாதும், குறிப்பிடத் தக்கதும் ஆகும். இத்துடன் ராமரத்னம் என்பவர் பெயராலும் கலைமகள் போட்டிகளை நடத்தி வருகின்றது. இவற்றோடு குங்குமம், கல்கி, கதிர், மங்கை போன்ற பல இதழ்கள் புதின எழுத்தாளர்களுக்குப் போட்டி வைத்துப் பரிசளித்து, ஊக்கு வித்து வருகின்றன. இவ்வகையில் இவ்விதழ்கள் பல சிறந்த புதிய எழுத்தாளர்களைப் புதின உலகுக்கு உருவாக்கித் தந்து, பாராட்டத் தக்கவர்களாகிறார்கள்.

இன்று திறனாய்வு என்றும், மதிப்புரை என்றும் பல ஆய்வேடுகளும், கட்டுரைகளும் எழுதப்பட்டு வருகின்றன, முதுகலைப் படிப்பிற்கும், அதற்கு மேற்பட்ட ஆராய்ச்சிப் படிப்புகளுக்கும் பல புதினங்கள் தொடர்பான ஆய்வுகளே மேற் கொள்ளப்பட்டு வருகின்றன. ஆனால் இவற்றில் பெரும்பாலும் புதினங்களைப் பற்றிய பாராட்டுதல்களும், உள்ளவற்றைப் பகுத்துக் கூறுதல்களாகவுமே காணப்படுகின்றன. திறனாய்வு என்ற நிலை மிகக் குறைவாகவே காணப்படுகின்றன.

ஆனால் மாதப் புதினங்கள் தொடர்பாக வெளிவரும் வாசகர் கடிதங்கள் சிறந்த திறனாய்வுகளாக அமைகின்றன. இக் கடிதங்கள் புதினங்களின் குறை, நிறைகளைச் சீர்தூக்கிக் காட்டு கின்றன. இதனால் புதின ஆசிரியர்கள் தாமெழுதிய புதினங் கள் படிப்பவர்க்கு எந்தெந்தக் கண்ணோட்டத்தில் எவ்வெவ் வாறு தோன்றுகின்றது என்பதை உணர்ந்து தங்கள் எழுத்தை அமைத்துக் கொள்ள வாய்ப்புண்டாகின்றது. கதைக்கதிர் என்னும் மாத இதழ் இத்தகைய திறனாய்வுக் கடிதங்களைப் போட்டி வைத்து, தேர்ந்தெடுத்து சிறந்தவற்றிற்குப் பரிசாக ரூபாயும் அளிப்பது இக்கடிதங்களுக்கு இருந்த வரவேற்பைக் காட்டுகின்றது.

இத்தகைய நிலையிலும் இன்றுள்ள புதினங்கள் பெரும் பாலும் கொலை, கொள்ளை, மற்றும் இன உணர்வுகளைத் தூண்டுவனவாகவும், தேவையற்ற வருணனைகளை உடைய தாகவும் வெளிவருகின்றன. முன்பும் இத்தகைய புதினங்கள் வெளிவந்து கொண்டிருந்தன. ஆனால் அதற்றிற்குப் புதின

உலகின் ஒரு மூலையிலேயே இடம் இருந்தது. அத்தகைய இழிவான புதினங்கள் வேண்டுவோர் அவற்றைத் தேடிச் சென்றே படிக்க வேண்டியிருந்தது. ஆனால் இன்று இவை பொதுமக்களின் இடையில் செல்வாக்குப் பெற்று விளங்கும் மாதப் புதினங்களாகவும், மாத, வார இதழ்த் தொடர்களாகவும் வெளிவருகின்றன. இதனால் சிறுவர்களும், பெரியவர்களும் மிகுதியாகப் படிக்கும் வகையில் இப்புதினங்கள் சமுதாயத்தின் நடுவில் புழக்கத்தில் அமைகின்றன. எனவே மக்கள் சீர்கெட்டுப் போவதற்கு மிகுதியான வாய்ப்பு ஏற்படுகின்றது.

"ஒரு நாவலோ அல்லது நாடகமோ மனமகிழ்வு தருவதாக அமையவில்லையென்றால், அது எண்ணங்கள், சிந்தனைகள், படிமங்கள் ஆகியவற்றின் கல்லறையாகவே அமையும். மனிதன் தன்னுடைய ஓய்வு நாளைச் சலிப்புணர்வுடன், ஆனால் அதைப் பற்றி ஒன்றுமே நினைத்துப் பார்க்காமல், கொட்டாவி விட்ட வண்ணம் மெத்தையில் சாய்ந்து கொண்டு கழித்துக் கொண்டிருக்கலாம்...ஆனால் நாடக அரங்கிலே ஒரு நிமிட நேர சலிப்புணர்வும், நாவலிலே சோர்வு குறையாத ஐம்பது பக்கங்களும உள்ளத்தை உறைய வைத்திடும் தன்மை வாய்ந்தவை. இது ஒரு கொலைக்குச் சமானம். சலிப்புணர்வு மூலம் எவ்வகையிலாயினும் ஒருபோதும் வாசகனை உலகத்தைப் புரிந்து கொள்ளும்படியாகச் செய்வதென்பது முடியாது. கலை என்பது எண்ணங்களின் மகிழ்வானதொரு விழாக் கொண்டாட்டம். படிப்போரும், பார்ப்போரும் அதனை அவ்வண்ணமே விரும்புகின்றனர்.

ஐயத்திற்கிடமற்ற மன மகிழ்வுப் பொழுதுபோக்கு மதிப்புக் கொண்ட இலக்கிய வகைகள் உண்டு; ஆனால் அவை நம் போன்றோருக்கு உரியன அல்ல. இத்தகைய புத்தகங்களிலும், நாடகங்களிலும் நிகழ்ச்சிகளின முறுக்கவிழ்வு வருகின்ற வரையிலோ அல்லது கருத்துப் பிழிவான அம்சம் வருகின்ற வரையோ வாசகன் காத்துக் கொண்டிருக்க முடிவதில்லை; மேலும் புஸ்தகத்தை வாசித்து முடித்தவுடன் அறனைத் தூக்கியெறிந்து விடுகிறான். ஆங்கிலத் துப்பறியும் கதைகளும், ஃபிரெஞ்சு மொழியின் பாலுணர்வு நாவல்களும் மற்று வீர சாகச, பரபரப்பூட்டுங் கதைகள் இத்தகையனவாம்.

இத்தகைய பழிக்கிடமான பொழுது போக்கு முறையானது எளிதில் கைவரக் கூடியதாகும். பாலுணர்வு நாவல் ஒன்றனை

எடுத்து ஆராய்ந்து பாருங்கள். அது எப்படி இணைத்தெழுதப் பட்டிருக்கின்றது என்பதனைக் கவனித்துப் பாருங்கள். அதனை எடுத்துப் படிக்கத் தொடங்கியவுடன் முடிவு வரும் வரை அதனை உங்களால் கீழே வைக்க முடியாது. ஆனால் அதனை முடித்த வுடனேயோ, நீங்கள் அதனைத் தூர எறிந்து விடுவீர்கள். காறி உமிழ்வீர்கள். நேரம் வீணாகி விட்டதே என்பதனை உணர்வீர் கள். இத்தகைய பொழுதுபோக்கு தமக்குத் தேவையில்லை. முன்னோக்கி நம்மை ஓர் இலக்கு நோக்கி இட்டுச் செல்லுகின்ற மன மகிழ்வே, பொழுது போக்கே நமக்குத் தேவை.

மன மகிழ்வு தருதல் என்பது, அனைத்திற்கும் மேலாக, ஓர் உள்ளார்ந்த இயக்கம் முரண்பாடுகளின் மோதல் அதிலிருந்து உருவாகும் இயக்க மாற்றம் ஆகும்."[62] என்று டால்ஸ்டாய் கூறுவதும் ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

எனவே வளர்ந்து வரும் சமுதாயத்தைப் பண்படுத்தத் தோன்றிய புதினங்கள் சமுதாயத்தைப் புண்படுத்தத் தோன்றி யிருக்கும் இந்நிலையை மாற்ற வேண்டியது புதின எழுத்தாளர் கடமையாகும்.

62 டால்ஸ்டாய், எழுதும் கலை. பக், 52-53.

## உசாத்துணைப் பட்டியல்


அப்புஸ்வாமி, பெ.ந. (மொழிபெயர்ப்பாசிரியர்), வசனமும் கவிதையும், சென்னை, ஜோதி பதிப்பகம், 1966.

அமுதன், பூவை, குழந்தை இலக்கியம் ஒரு மதிப்பீடு, சென்னை, குழந்தை எழுத்தாளர் சங்கம், 1976.

இரத்தினம், கா.பொ, எழுத்தாளர் கல்கி, சென்னை, பழனியப்பா, 1966.

இராமலிங்கம், மா புனைகதை வளம், சென்னை, தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், 1973.

கீதா, கோ. வெ, தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம், சென்னை, அணியகம், 1979.

கைலாசபதி, க, தமிழ் நாவல் இலக்கியம், சென்னை, பாரி நிலையம், 1968.

சிவத்தம்பி, கா, நாவலும் வாழ்க்கையும், சென்னை தமிழ்ப் புத்தகாலயம், 1978.

சுப்பிரமணியம், கா. நா, முதல் ஐந்து தமிழ் நாவல்கள், சென்னை, அமுதம், 1957.

சி. செல்வராசன் சில்லையூர், ஈழத்தில் தமிழ் நாவல் வளர்ச்சி, சென்னை, அருள் நிலையம், 1967.

தண்டாயுதம், இரா, நாவல் வளம், சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1975.

நகுலன் (தொகுப்பாசிரியர்), (குருக்ஷேத்ரம், சென்னை, தமிழ் புத்தகாலயம் 1968.

நடராஜன், டி.எஸ்; (மொழி பெயர்ப்பாசிரியர்), எழுதும் கலை சென்னை, என்.சி. பி.எச், 1978.

பக்கியமுத்து, தி, (பதிப்பாசிரியர்) நூறாண்டு. தமிழ் நாவல் தரும் செய்தி, சென்னை, சி.எல்.எஸ், 1979.

பாக்கியமுத்து, தி, (பதிப்பாசிரியர்) விடுதலைக்குப் பின் தமிழ் நாவல்கள், சென்னை, சி.எல்.எஸ், 1974.

பி. ஸ்ரீ, நான் அறிந்த தமிழ் மணிகள், சென்னை, வானதி, 1971.

புதுமைப் பித்தன், புதுமைப்பித்தன் கட்டுரைகள். நான்காம் பதிப்பு, மதுரை, மீனாட்சி புத்தக நிலையம், 1978.

மகரம் (தொகுப்பாசிரியர்), எழுதுவது எப்படி, சென்னை, பழனியப்பா, 1979.

வல்லிக் கண்ணன், சரஸ்வதி காலம், பாளையங் கோட்டை, இலக்கியத் தேடல், 1982.

வள்ளியப்பா, அழ. வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம், சென்னை, பாரி, 1981.

வீராசாமி, தா.வே, தமிழில் சமூக நாவல்கள் சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1978.

தமிழ் நாவல் வகைகள், சென்னை தமிழ்ப்புத்தகாலயம், 1979.

## ஆங்கில நூல்கள்


| | |
|---|---|
| Dhandayudam R, | A Study of the Socoilogical Novels in Tamil, Madras, University of Madras 1977. |
| Bradlay, John P, | Leo F. Daniels, Thomas C. Jones (Compiled), The International Dictionary of thoughts, Chicago, I.G. Ferguson Publishing Company, 1969. |
| Henkle, Roger B, | Reading the Novel, New york Harper and Row Publishers, 1977. |
| Miriam Allott | Novels on the Novel, London, Roulledge and Kegan Poul Ltd, 1959. |
| Rudolf flesh (Editor) | The Book of Unusual Quotationsl London, Cassell and Co. Ltd, 1959. |
| Subramanian, S.V. | A.A. Manavalan (Editor), Dr. Mu, Va, Madras International Institute of Tamil Studies, 1975. |

# தமிழ்ப் புதினங்கள் - அகர வரிசை

1 அக்கினி; குமாரஸ்வாமி, த.நா, 1943, 268, சென்னை, கலைமகள், ரூ 2, வங்க. ஆகுன், தாரா சங்கர் பந்த்யோ பாத்யாய.

2 அக்கினிக் கோபம்; மணிசேகரன். கோவி, 1956, 429, சென்னை, முத்து நூலகம்.

3 அக்கினி சாட்சி; ஆறுமுகம், பூவை. எஸ், 1968, 109, சென்னை, பத்ம ஜோதி, ரூ3.

4 அக்கினி நட்சத்திரங்கள்; இந்துமதி, 1981, 232, சென்னை, திருமகள், ரூ 11.50.

5 அக்கினிப் பரீட்சை; ரகுநாதன், 1976, 1978, 580, 624, 802, மாஸ்கோ, மு.ப;-;ருஷ்ய, அலெக்சேய் தல்ஸ்தோய்.

6 அக்கினிப் பூக்கள்; ராஜேந்திரன். கல்கி, மே 1978, 95, சென்னை, பிரேம ரத்னம், ரூ1.

7 அக்கினி வீணை; ஜெகசிற்பியன், அக். 1958. 246, சென்னை, வானதி, ரூ 2-50.

8 அக்னி நதி; சௌரி, 1971, 594. தில்லி, என்.பி.டி; ரூ8-50, உருது. ஆக் கா தார்யா, குர் அதுல் ஐன் ஹைதர்.

9 அகட விகட கவி அதி அற்புத ஷோக் சுந்தரி சரித்திரம்; கந்தசாமி பிள்ளை, 1908, 120, சென்னை, சி.எஸ்.நம்மை யா, அணா 8.

10 அகதி; நீலமணி, கே.பி; 1965, 62, சென்னை, கலைமகள். ரூ1.

11 அகதி; மாயாவி; 1951, 156, சென்னை, சாந்தி, ரூ 2, 1955, 168, தென் ஆற்காடு, புதுமை, ரூ 2.

12 அகதியின் ஆனந்தம்; ஆச்சார்யா, சி.கே.என், 1966, 144, சென்னை, ஸ்ரீ லட்சுமண விஜயம், ரூ 2.

13 அகல்யா; சண்முகம், ர. 1973, 263, மதுரை, அறிவு நிலையம், ரூ 7, சூன் 1978, —, சென்னை, ராணிமுத்து, ரூ 1.25.

14 அகல்யா; பாலகுமாரன், 1982, 187, சென்னை, வானதி, ரூ. 9.

15 அகல்யா பாய்; புஷ்பரதச்செட்டி, ஊ, 1885, 30, சென்னை, எம்.எஸ்.பி; அணா 3

16 அகல் விளக்கு; வரதராசனார், மு; 1958; 406; சென்னை; தாயகம்; ரூ 5.

17 அகிலா; மணிசேகரன், கோவி; சன. 1973, அக். 1977, 184, சென்னை, வானதி, ரூ. 5

18 அங்கே இங்கே எங்கே; பிரபாகர். பட்டுக்கோட்டை, பிப். 1981, 76, சென்னை, மோனா, ரூ 1-25.

19 அச்சுத ரங்கம்மா; மணிசேகரன். கோவி; மே 1979, 232, சென்னை, வ. ப. ரூ 9

20 அசட்டுப்பிச்சு; ஆர்.வி. —, —, சென்னை, கலைமகள்; ரூ 2

21 அசட்டுப் பெண்; பாலப்ரியா, டிசம், 1963, 55, சென்னை, கலைமகள், 90 பை

22 அசடு; காசியபன், 1978, 114, பாளையங்கோட்டை எஸ். விஜயலக்ஷ்மி. ரூ 5

23 அசடு வழிந்தது; விகரு, 1956, 1962, 42, சென்னை, மாணவர் இல்லம், 60 காசு.

24 அசன்பேயுடைய சரித்திரம்; சித்திலெவ்வை மரைக்காயர், முகமது காசிம் மரைக்காயர், மார்ச் 1890, 220, சென்னை, அர்ச் சூசையப்பர் அச்சுக்கூடம், —, 1974, 170, திருச்சிராப்பள்ளி, ஜமால் முகமது கல்லூரி, ரூ 6.

25 அசும்பு மலை அரசி; முத்துப்பாண்டியன், பி.ஜி.ஏ; இ.ப. 1951, 128, —, ஆ-ர், ரூ 1-40

26 அசுர கணம்; சுப்பிரமணியம், க.நா; —, —, —, —, —.

27 அசோக சக்கரம்: மணிசேகரன், கோவி, 1966 : 384, சென்னை, வானதி, ரூ 6.

28 அஞ்சனா புரிந்து கொண்டாள்; லக்ஷ்மி, மார்ச் 1982, —, சென்னை, திரைக்கதிர், ரூ 1.

29 அஞ்சனாக்ஷி; சோமசுந்தரம் பிள்ளை, சி. 1917, 439, சென்னை, சி. குமாரசாமி, ரூ 1-4-0. (இரண்டாம் பாகம்

30 அடங்காப் பிடாரி கடத்திய அசடன் ; சந்திரமோகன்
—, —, —, —, ரூ1,50

31 அட, மண்ணில் தெரியுது வானம் ; ராஜு, தி சா, செப். 1977 , 150 , சென்னை, பூம்புகார் , ரூ 3.90

32 அடமானக் கம்பெனியின் ரகசியம்; இராமச்சந்திரன், பி.எஸ்
—, —, —, —, —.

33 அடி; ஜானகிராமன், தி. செப், 1979 , 70 , சென்னை , மோனா , ரூ 1-25.

34 அடிச்சுவடுகள் ; விசாலன் , அக். 1973 , 272 , சென்னை, நன்செய் , ரூ8.75

35 அடிச்சுவடுகள்; ஹம்சா தனகோபால், 1982 , 226, மதுரை, மீனாட்சி , ரூ 10.75

36 அடிமைத்தாய்; ஜோஷீ; 1939, 1946, 40, காரைக்குடி, நவயுக, அணா 8

37 அடிமைப் பூதங்கள்; மோ னரங்கன், ஆலந்தூர்,கோ, 1974, 32, சென்னை, வசந்தா, ரூ 1 .25

38 அடிமைப்பெண்; — , 1877, 16, சென்னை, சி.கே.எஸ். அணா 2.

39 அடிமைப்பெண்; குயிலன், 1961, 228, சென்னை, குயிலன் , ரூ 3.50; மூலம். த பாண்ட்மெய்டு, பெர்ல். எஸ்.பக்

40 அடிமையின் காதல்; ரங்கராஜன், ரா.கி; ஜுன் 1975, 451, நாகப்பட்டினம், குமரி, ரூ 15.

41 அடிமையின் காதலி; நாதன், 1981, 208, சென்னை, அசோகன், ரூ 13.

42 அடிமையின் தியாகம்; கௌசிகன், இ.ப. 1959: 244, சென்னை, வானதி, ரூ 3. 50

43 அடிவானம்; ராஜவேலு; கு; —, —, —; —; —,

44 அடிவானம்; எல்லார்வி; —, —, சென்னை, குரு, —

45 அடுத்த வீடு; லக்ஷ்மி. சன 1979,536, சென்னை, பூங்கொடி ரூ20.

46 அடைக்கலம்; ஜோதிர்லதா கிரிஜா, 1977, 196, நாகப்பட்டினம், இமயம், ரூ 6

47 அண்டப் புளுகனின் அதிசய யாத்திரை; கோபால்கிருஷ்ணன் கல்வி; மார்ச் 1966, 88, சென்னை, வைரம், ரூ 1.50

48 அண்டை வீட்டார்; சங்கர நாராயணன், கே.ஸி. மார்ச் 1967, 346, சென்னை வா.வ. ரூ 6. மலையாள அயல்க்கார், பி. கேசவதேவ்

49 அண்ணன் தம்பி; ஜயராமன் அ.கி. 1977, 123, சென்னை, ஜோதி, ரூ 3.50, வங்க. வைகுண்டேர்வில், சரத்சந்திரர்

50 அண்ணனின் காதலி; பார்த்திபன் வி. டிசம் 1977, 112, சென்னை, மாலைமதி, 80 பை

51 அண்ணனும் தங்கையும்; கண்ணுச்சாமி கே.1959, 1969, 84, சென்னை, கலைமகள், ரூ 1 25

52 அணில் கடித்த பழம்; அமுதாகணேசன். சூலை 1981, 128, சென்னை, ராணிமுத்து, ரூ 1.50

53 அணுகுண்டு அழகிகள்: சந்திரமோகன். சூலை 1965, 94, சென்னை, ஸ்ரீமகள், 50 பை

54 அணைக்க, அணைக்க; புனிதன். அக் 1978, 270, சென்னை, வானதி, ரூ 9

55 அணைக்க ஒரு கை; லஷ்மி. டிசம் 1981, 93, சென்னை, நவரத்தினம், ரூ. 1.25

56 அணைப்பு அபாயம்: கண்ணுச்சாமி கே. —, —, மதுரை, கலைப்பொன்னி, ரூ 1

57 அணையாச்சுடர்;வெங்கட்ராம் எம் வி.1967,150,சென்னை வைரம், ரூ. 3

58 அணையாவிளக்கு, ஆர்.வி. சூன் 1956, மே 1970, 444, சென்னை, கலைமகள், ரூ 7

59 அத்திப்பழம் : தசரதன், மா.கி. 1961, —, —, —,—

60 அத்திப்பேட்டை அந்தோணியார்; காந்தாரி. 1977, 22, திருச்சி, விமலை; ரூ 1

61 அத்தை; லக்ஷ்மி; —, —, —, —, —,

62 அத்தை; பண்ணன், —, —, சென்னை, நான்மணி, —,

63 அத்தை வீடு; ராமசாமி, ஆழி. வே, ஏப். 1975, 48, சென்னை, கவிதா. ரூ 2

64 அதிசய இரவு; மனோகரன். ஐ. எஸ்; சூன் 1975, 32; சென்னை, அலங்கார். 60 பை

65 அதிசய இளவரசி அமுதா; விவேகா, டிசம். 1978, 80, மதுரை, கலைப்பொன்னி. ரூ 1-20.

66 அதிசயக் கல்லின் அற்புதம்; வயிரவன், நா. மே 1967, 32, சென்னை, மணிவாசகர், 75 பை

67 அதிசயக்கிளி; சுப்பிரமணியம், எ,ஜி. 1974, 16, சென்னை, குழந்தைகள் உலகம், ரூ 1

68 அதிசயக்குகை; சண்முகம், நாக, ஆக.1980, 54; சென்னை, திருமகள், ரூ 2.50

69 அதிசயக்கொலை; ராஜன், எஸ்.என்.கே; நவம். 1976, 80, சென்னை, துப்பறியும் கலை, ரூ 1.50

70 அதிசய நாய்; வாண்டு மாமா; 1961, நா.ப. 1975, 107, சென்னை , பழனியப்பா, ரூ 3.25

71 அதிசயப் பாறை; அந்தோனி சாமி, வி, 1977, 263, சென்னை, அசோகன், ரூ 10

72 அதிசயப் பிரயாணம்; சொக்கலிங்கம். எஸ், 1962, 1966;228, சென்னை, குயிலன், ரூ 4, ஆங்கில, கலிவர்ஸ் டிராவல்; ஜோனாதன் சுவிப்ட்.

73 அதிசய மாளிகை; முத்தையா, முல்லை, 1956, 1963; 123, சென்னை, இன்ப. ரூ 2.50, ஆங்கில. த ஹவுஸ் ஆப் த கேபிள்ஸ், நத்தானியல் ஹவ்த்தான்.

74 அதிசய வீணை; வாண்டு மாமா. 1979, 100, சென்னை, வானதி, ரூ 3.50

75 அதிர்ச்சி: ஜோதிர்லதா. கிரிஜா, 1975, 112, நாகப்பட்டினம், குமரி, —

76 அதிர்ஷ்டக் குழந்தை: பாலசுப்பிரமணியம். கு.ம. மூ.ப. 1977, 80, சென்னை, சங்கரி. ரூ 3

77 அதிர்ஷ்ட தேவதை: லக்ஷ்மி. -, -, சென்னை: சக்தி: அணா 1

78 அதிரூப மோகனவல்லி: கந்தசாமி பிள்ளை. 1916, 76, சென்னை, ஸன், அணா 5

79 அதுவரை காஞ்சனா: மகரிஷி. ஜுன் 1978, 107, சென்னை, மாலைமதி: 80 பை

80 அதுவா, இதுவா; ஷண்முகசுந்தரம். ஆர். 1966, 115, நாகப்பட்டினம், இமயம், ரூ 3-50.

81 அதுவேறு, இதுவேறு' தூயவன். ஏப். 1981, 53; சென்னை, நயனதாரா; ரூ 1-25.

82 அதை நான் செய்ய முடியாது: —, 1875, 24 , சென்னை, சி.கே.எஸ். அணா 3.

83 அதை விட ரகசியம்: கண்ணதாசன். 1975, 128, சென்னை, வானதி. ரூ 3-50

84 அந்த இரவு; தணலன், ரா. 1950, 47, சென்னை, வீனஸ், அணா 8.

85 அந்த உலகம் விந்தையானது: மலர்மன்னன், சூலை 1980, 172 :சென்னை, வானதி, ரூ 7-50, 1980, 112, சென்னை, தினமணி கதிர், ரூ 1-25

86 அந்தக்குரல்: மணி, ஆர். எஸ், —, —, சென்னை, லிப்கோ. ரூ 1.

87 அந்தக்கை: சேரன், —, —, சென்னை, ஸ்ரீமகள், ரூ1.

88 அந்தகாரம்: சுரேசன். —, —, -, -, -,

89 அந்தச்சிரிப்பு: சரோஜினி ஸ்ரீராம். —, —, —, —, —,

90 அந்தச்சிலை: ராமச்சந்திரன். எஸ். 1959, —, —, —, —,

91 அந்த நாள்: வரதராசனார், மு. 1948, ஆ.ப. 1964, 212, சென்னை, தாயகம், ரூ3-25, நவம். 1969, 208, சென்னை, ராணிமுத்து, ரூ1

92 அந்தப்புரத்தில் ஒரு நந்தலாலா: ராஜேந்திரகுமார். நவம். 1982, 96: சென்னை, நவரத்தினம். ரூ1-25.

93 அந்தப்புரம்: தாமரை மணாளன். 1981, 560, சென்னை, வானதி. ரூ35.

94 அந்தப்புர ரகசியம் அல்லது இராஜேஸ்வரி: இராமலிங்க முதலியார், திரு மயிலை, 1919, 180, சென்னை, அமெரிக்கன் டைமண்ட் பிரஸ், 12 அணா, வங்க. கபாலகுந்தலா, மருண் மாயி, பங்கிம் சந்திரர்.

95 அந்தரங்க அவஸ்தைகள்: ராஜேந்திர குமார். சூலை. 1982, 95: சென்னை, நவரத்தினம். ரூ 1.25

96 அந்தரங்கம்: ராஜேந்திரன், பி.எல். 1972, —, சென்னை, பூங்கொடி. —

97 அந்தரங்கம்: சரோஜா சண்முகம். 1980, 196, சென்னை, சி. நூ. க. ரூ 9

98 அந்தி நிலா: ஆறுமுகம், பூவை, எஸ், சூலை 1975, 418, சென்னை, வாசு: ரூ 10

99 அந்தி நிலாச்சதுரங்கம்: ஆறுமுகம். பூவை. எஸ். 1982:204, சென்னை, மணியம் பதிப்பகம். ரூ 13

100 அந்தி நிழல்; தமிழ் நாவல், காமு டிசம். 1976, 146, சேலம், தென் தமிழ்: ரூ 4.50

101 அந்தி மந்தாரை; குலசேகரன், எஸ் 1981, 212, சென்னை, குவைவ, ரூ 12

102 அந்தி மாலை; கிருஷ்ணா, 1965, —, சென்னை, ம, நூ, —

103 அந்தி மாலை; அம்பை, 1967, 182, சென்னை, கலைமகள், ரூ 2.50

104 அந்தி வானம்; அழகிரி விசுவநாதன், 1965, 128, சென்னை தமிழ்ப் பண்ணை, ரூ 2 50

105 அந்நிய மனிதர்கள்; கணேசலிங்கன், செ, 1982, 96, சென்னை பரதன், ரூ 4.50

106 அந்நியன், ஸ்ரீராம், வெ, 1980, 164, சென்னை, க்ரியா, ரூ 15 பிரெஞ்சு. எல் எட்ரேஞ்சர், ஆல்பெர் க ம்யு

107 அநுமானலிங்கின் சரித்திரம்; ஹரிசிவனார், பிராணதார்த்தி 1902, 258, சென்னை, வி.என் ஜூபிலி பிரஸ், அணா 12 ஆங்கில, ஷெர்லாக் ஹோம்ஸ், கோனன்டாயில் துரை

108 அப்பா தேவை; குரும்பூர் குப்புசாமி, நவம். 1978, 128, சென்னை. ராணிமுத்து. ரூ 1.25

109 அப்பாவின் ஆசை; பாரதன், திருச்சி, சன. 1963, 71, புதுக் கோட்டை, தமிழ் நிலையம். ரூ 1.25

110 அப்புசாமிக்குள் குப்புசாமி; பாக்கியம் ராமசாமி, மே. 1976, 248, சென்னை: பூம்புகார்: ரூ 5.90

111 அப்புசாமியும் ஆப்பிரிக்க அழகியும், பாக்கியம் ராமசாமி: அக். 1976, 295, சென்னை: பூம்புகார்: ரூ 7.40

112 அப்புவுக்கு அப்பா சொன்ன கதைகள், ஜெயகாந்தன், 1980, 192: மதுரை, மீனாட்சி, ரூ 8.50

113 அப்போதும், இப்போதும்; சிவசங்கரி, டிசம். 1982, 55, சென்னை: மேகலா: ரூ 1.50

114 அப்ஸரா; சுஜாதா, டிசம், 1978, அக், 1980, 96, சென்னை, மோனாபப்: ரூ 4

115 அபயக்குரல்: மோகன், எம், —, —, சென்னை: ஸ்ரீமகள், 50 காசு

116 அபரஞ்சி மகள்; இருகூரான், ஏப். 1977, 160, சென்னை: சேது: ரூ 5

117 அபராதி; கோதை நாயகி அம்மாள், வை. மு: —; 99: சென்னை: ஜகன்மோகினி: ரூ 1-2-0

118 அபராஜிதா; சாவித்திரி அம்மாள், இ, 1944, 1945, 158: சென்னை: கலைமகள்: ரூ 1-8-0: ஆங்கில. —, எப் டபிள்யூ பெயின்

119 அபலைப் பெண்; ஜான் துரைராஜ். ஜே. இ.ப 1969: 93: சென்னை: அருணோதயம்; ரூ 2, ஆங்கில. ஜேன் அயர் சார்லெட் பிராண்டி.

120 அபலைப்பெண் கண்ணீர், பார்த்திபன்: 1973,80, சென்னை ராமன்: ரூ 2.50

121 அபலையின் கண்ணீர்; கல்கி: நா.ப. 1956, 82, சென்னை: பாரதி: ரூ 1-40

122 அபஸ்வரம்; ஜெகதீஸ்வரி: 1964,112. சென்னை: தணிகை: ரூ 2

123 அபாய அழகி; கிருஷ்ணன். கே.வி பிப். 1967: 84, சென்னை; ஸ்ரீமகள்: 50 பை

124 அபாயச்சங்கு; நீலம், மூ.ப. சன. 1968,48. சென்னை: கலைமகள்: 75 பை

125 அபாயச்சீட்டு; மீரான், ஏ.எம், —, —, சென்னை: லிப்கோ: ரூ 1

126 அபாயப்பெண்; வாசவன், —, —, —, —, —.

127 அபாயபுரி அழகி; அண்ணாமலை, கோ.தீ, 1971, 71, சென்னை: சத்யா: 60 பை

128 அபாய மோகினி; மூர்த்தி, பி. கே, 1930, —, மதுரை, கலைப்பொன்னி: ரூ 1

129 அபாய விளக்கு; உமாபதி, வி. 1965, —, —, —, —,

130 அபிசீனிய அடிமை; கணேசன், பி.சி. இ.ப. ஆக 1978, 112 சென்னை: மாதவி: ரூ 4

131 அபிதா; ராமாமிருதம், லா.ச, இ. ப. 1980, 119, மதுரை: முத்து: ரூ 5-50

132 அபிராம சுந்தரியின் குடும்ப ரகசியம்; மேதாவி —, —, சென்னை: பிரேமா: ரூ 1-50

133 அபுஷாம கிஸாமயா இஸ்வட்நாயக் கிஸா; கமாலுதீன் சாகிப், ஆக. 1913, 64, சென்னை: ரஸாக்கியா பிரஸ்; —.

134 அபூர்வ சிந்தாமணி; குப்புசாமி முதலியார், ஆரணி, —: —: —: —; —.

135 அபூர்வ மனோஉல்லாசனி என்னும் விவேகாநந்தக் கதை; குப்புசாமி முதலியார், சி.நா. 1910, 143, சென்னை: ஆர். விவேகாநந்தா பிரஸ்; அணா 12

136 அம்பலவாணன் அல்லது நாவாய்க் கைதி; சுப்பிரமணியம் பி.எஸ். — ; 239, சென்னை: அல்லயன்ஸ், ரூ 3: ஆங்கில, லெஸ் மிஸரபிள்: விக்டர் ஹ்யூகோ.

137 அம்பாலிகை; முனிசாமி பண்டிதர். வே. து, 1910, 154, சென்னை: விவேகானந்தம் பிரஸ், அணா 12

138 அம்பிகாபதி; இராமநாதன், அரு; 1954, 109, சென்னை, பிரேமா ரூ 1-4-0

139 அம்பிகா-பதி: தமிலன்; 1971, 1972, 191; சென்னை: பூங்கொடி: ரூ5.

140 அம்புஜ விலாசலத்தின் அதிசய சம்பவம்; மூர்த்தி முதலியார். ச, நா, — , — , சென்னை: ஜி.ஏ. அணா 8.

141 அம்புஜா; ஸ்ரீசைலதா தாச்சாரி: டிசம். 1911, 35, சென்னை: பி.ஆர். ராமஅய்யர் அண்டு கோ, அணா 2.

142 அம்மா; சக்தி வசந்தன்: அக். 1977, 144, சென்னை: நர்மதா: ரூ5.

143 அம்மா: சிவசங்கரி: பிப். 1981: 206; சென்னை, பாரதி: ரூ 9-75.

144 அம்மா; முல்லைமுத்தையா: 1956, 1961, 153, சென்னை: இன்ப: ரூ 2: ருஷ்ய. மாட், மாக்ஸிம் கார்க்கி.

145 அம்மா என்மனைவி; ஜீவா, — , 28, சென்னை: ஜீவோதயம்: 6 அணா.

146 அம்மா என்ற பெண்; லட்சுமி சுப்பிரமணியம், சூலை 1982, 52: சென்னை, மணியம்: ரூ 1-20

147 அம்மா ப்ளீஸ் எனக்காக; சிவசங்கரி, டிசம். 1980, 275, சென்னை: வானதி, ரூ 11-50

148 அம்மா வந்தாள்; ஜெயகாந்தன், 1966, 1972, 1976, 1978, 1980, 208, மதுரை: மீனாட்சி: ரூ 9.

149 அம்மா வந்தாள்: ஜானகி ராமன், தி. 1966. 219, சென்னை, ஐா.வ —,

150 அம்மாவும், அத்தையும்; வள்ளியப்பா, அழ, 1953, 1963, 1969, 28, சென்னை: ஸ்டார் ரூ 1-50.

151 அம்மாளுவின் மகள்; பழனியப்பன், வீர, 1971, 116, சென்னை: கலைஞன்: ரூ 2-50.

152 அம்மையப்பன்; குரும்பூர் குப்புசாமி, சூலை 1976, 144: சென்னை: ராணிமுத்து: ரூ 1.

153 அம்ருத சஞ்சீவினி என்னும் டாலிஸ்மன்; —, —, —, சென்னை : ஜி.ஏ. ரூ 1-2-0

154 அமர் சோனார் பங்களா; டேவிட் சித்தையா, மார்ச். 1973, 190: சென்னை : பூங்கொடி: ரூ5,

155 அமரத்யாகி; கோதைநாயகி அம்மாள், வை,மு, —, 124, சென்னை; ஜகன்மோகினி, — .

156 அமரதாரா; ஆனந்தி: 1959, 528, சென்னை: பாரதி, —,

157 அமரநாத், ஷண்முக சுந்தரம், ஆர். 1965, 1977, 177, சென்னை: வைரம்: ரூ 5-50 வங்க — , சரத்சந்திரர்.

158 அமரபுரி இளவரசி; ஸோமாஸ்: செப். 1963, 76, திருச்சி, யுனைட்டெட்: ரூ 1.

159 அமரஸிம்ஹன்; கோபால கிருஷ்ணபிள்ளை: என்.சி. 1914, 347, சென்னை, விவேக போதினி: ரூ 1. பிரெஞ்சு.லி கம்டே மாண்டி கிறிஸ்போ: அலக்ஸாண்டர் டூமாஸ்.

160 அமலா; ஷண்முக சுந்தரம், ஆர். 1966, 164, நாசப்பட்டினம் இமயம்: ரூ 5: வங்க—, உபேந்திரநாத்

161 அமிர்த ஸஞ்சீவினி; ஸ்ரீநிவாச ஐயங்கார், சி. ஆர். சூன் 1913. 369, சென்னை: கமர்சியல் பிரஸ்: ரூ 1-2-0

162 அமிர்தசரஸ் ராணி; மாரிசாமி, எஸ். எஸ். —,—,—,—. —,

163 அமிருதவல்லி: மலைமகள்; 1910. 107. சென்னை: கார்டியன்: அணா 8

164 அமீன்பே சரித்திரம்: அஹமதுக்கனி மரைக்காயர் ஆலிம் சாகிபு க. நாகூர் அண்டு சின்னவாப்பு மரைக்காயர் ம:

1904, 156, 122, சென்னை: மிமோரியல் அச்சுக்கூடம், —,
(2 பாகம்)

165 அமுதக்கொடி; கா. ஸ்ரீ. ஸ்ரீ. 1978, 232, சென்னை, த.எ.கூ.ச
ரூ 7.50 வங்க — வி. ஸ. காண்டேகர்

166 அமுதமாகி வருக, ராஜம்கிருஷ்ணன், 1965, 455, சென்னை,
த.எ.கூ.ச. —,

167 அமுத மொழி; கோதை நாயகி அம்மாள். வை.மு. அக்
1944, 186, சென்னை: ஜகன்மோகினி, ரூ 2-8-0.

168 அமுதா: சுப்பு ஆறுமுகம், —. 144, சென்னை: மல்லிகை:
ரூ 3.

169 அமுதும் தேனும்; அண்ணாமலை, சின்ன: 1967: 156:
சென்னை; த.ப. —.

170 அமெரிக்காவில் அபாய மனிதர்கள்; —, —, —, சென்னை,
பபான்னி: ரூ 1

171 அமைச்சர் திலகம்; தமிழ்ப்பித்தன்: 1970. 147 மதுரை:
சோமு: ரூ 3.25

172 அமைதி எங்கே; சுந்தரராமன், பூவாளூர், 1966, 323,
சென்னை: த.எ.கூ.ச. ரூ 5

173 அமைதியின் அஸ்திவாரம்; கோதைநாயகிஅம்மாள், வை.மு
—, —, சென்னை: ஜகன்மோகினி ,—

174 அமைதியின் மடியிலே; கிருஷ்ணசாமி, என். சன. 1968, 145
சென்னை: என.சி.பி.எச். ரூ 1-50. ருஷ்ய. அல்யோனா
எஸ். ஆன்டொனோவ்

175 அமைதியைத் தேடி; சரஸ்வதி ராம்னாத்: அக். 1977, 94,
சென்னை: பிரேம ரத்னம்: ரூ 1

176 அமைதியை நோக்கி; காந்தி கோ. மோ: 1964,— —, —,

177 அய்யோ ஆபத்து; சாமி, பி.டி, —, —, சென்னை
ஸ்ரீமகள்: 50 காசு

178 அர்த்த நாரி; செம்பியன்: நவம். 1979, 140, சென்னை:
ம-நூ ரூ 6.50

179 அர்த்தஜாமப் பூக்கள்; தாமரை மணாளன், மே 1981, 62,
சென்னை, மணியம், ரூ 1-20

180 அரக்கர் நகரம்; அனுராதா, செல்வி, 1982, 64, சென்னை அனு, ரூ 1-20

181 அரக்கியின் மாயத்தீவு; அனுராதா, செல்வி சன, 1980, 80 சென்னை, மர்ம வீணை, ரூ 1-20

182 அரக்கு மாளிகை; லக்ஷ்மி: 1979, 592, சென்னை: வானதி, ரூ24.

183 அரங்கமும், அந்தரங்கமும்; கண்ணதாசன், சன. 1978,234, சென்னை: பொதிகை: ரூ 4.

184 அரசகுமாரன், அமிர்தநாயகம், பிள்ளை, ஓய், நா.ப. 1870, 16. சென்னை: எச். டபிள்யூ. லாரி, அணா 1. ஏ.ப. 1878, 16, சென்னை: எம்.ஆர்.டி. —, முப்பத்து மூன்றாம் பதிப்பு. 1884 ,—,

185 அரசகுமாரி ஆயிஷா; வாண்டுமாமா: 1972, 1979: 96, சென்னை: வானதி: ரூ 6.

186 அரசன் ஆர்தரும், அவன் வீரர்களும், முத்தையா. நாக. 1968, 64, சென்னை: சி இ.ப. ரூ 1, ஆங்கில. கிங் ஆர்தர் அண்ட் கிஸ் நைட், சர் தாமஸ் மலேரி.

187 அரசனும் ஆண்டியும்; ஐயாப்பிள்ளை, அருள், 1963, 100, சென்னை: முப்பானூலகம், ரூ 1-75, மூலம். த பிரின்ஸ் அண்ட் த பாப்பர், மார்க் ட்வொய்ன்.

188 அரசனும் ஆண்டியும்: துரைராஜ், ஜே.ஜான். 1968, 117, சென்னை: பி.ஜி. பால் அண்ட் கம்பெனி. ரூ 1 மூலம். மேற்படி,

189 அரசாள நினைக்கும் அதிசய மச்சம்; தங்கராஜா, 1981, 62: சென்னை: கௌரி: ரூ 1-20.

190 அரசாளப் பிறந்த மகன்; சந்தோசம். கே.ப, நா.ப. 1936, 57, சென்னை, கழகம், அணா 8. மூலம். த மேன் பார்ன் டு பி கிங், வில்லியம் மோரிஸ்.

191 அரசியும், பையனும்; அமிர்தநாயகம்: பிள்ளை, ஓய் இ.ப. 1885, 12, சென்னை:எம்.ஆர்.டி. அண்ட். பி, ரூ 0-0-1.

192 அரசியைப் பார்க்க விரும்பிய பையன்; அமிர்தநாயகம்: பிள்ளை,ஓய், 1880, 16, சென்னை: எம்.ஆர்.டி. அண்ட் பி, ரூ 0-0-1.

193 அரசிளங்குமரி; மனோகரன், —, 80, —, —, ரூ 1-20.

194 அரசூர் லெட்சுமணன்; குப்புசாமி முதலியார், ஆரணி —,

195 அரண்மனை ராகங்கள்; மணிசேகரன், கோவி. 1977, 151, சென்னை, நல்வாழ்வு, ரூ5.

196 அரளிப்பூ மேல் ஆசை வைத்து; அனுராதா ரமணன். சன, 1981, 106, சென்னை, மாலைமதி, ரூ 1:

197 அருணா ஆறாவது; புஷ்பா தங்கதுரை, 1980, —, சென்னை, ராணிமுத்து, ரூ 1-25.

198 அருணோதயம்; கோதை நாயகி அம்மாள், வை.மு, —, —, சென்னை, ஜகன் மோகினி, —.

199 அருணோதயம்; அரங்கசாமி நாயுடு, தி, 1920, 36, திருச்சி, ராப்பள்ளி, சங்கை லாகோம்பு, அணா 2.

200 அரும்பு; வெங்கட்ராம், எம்.வி. ஆக. 1977, 563. சிதம்பரம் மணிவாசகர், ரூ 18. பி.ப. — : சென்னை, த.பு. ரூ 9.

201 அரும்பு அம்புகள்; கல்கி. சன. 1980, 359, சென்னை, பாரதி, ரூ 17-50.

202 அருமை கிரிஜா; என்.ஜே.ஆர். 1964, 184, கோயமுத்தூர், கவிஞர், ரூ 3.

203 அருவிக்கரை அழகி, நெடுமாறன், ப. 1979, 198, சென்னை, வானதி, ரூ 6-50.

204 அருவி மகள்; பாண்டியன், தா. தா. பொன்னிவளவன், 1964, 258, சென்னை, என்.சி.பி.எச். ரூ 3-50, ருஷ்ய, ஆல் பைன் பாலட், வாசில் பைக்கோவ்.

205 அருள் நீதி; சுப்பிரமணியன், வை. — , — ,—, —,

206 அருள்பண்ணை; சங்கரராம், 1956, 134, சென்னை, கலை மகள், ரூ 2.

207 அருள்மொழி நங்கை; ஜெகசிற்பியன், — ,—, —, —,

208 அருளோசை; தாமரை மணாளன், 1972, — , சென்னை, த.பு. — .

209 அரை நாழிகை நேரம்; நாராயணன், கே, 1978, 310, தில்லி என்.பி.டி, ரூ 14-25, மலையாள, அர நாழிக நேரம், பாறப் புறத்து.

210 அரை மனிதன்; சீனிவாசன், ரா, 1977, 128, சென்னை, அணியகம், ரூ 4.

